குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 ] துந்துபி ஆண்டு தைத்திங்கள் 10-2-83 [ இதழ் 3



தருமையாதீனத் திருமடத்தில்:

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள்



அமெரிக்கநாட்டு ஹவாய்த்தீவு சைவசித்தாந்த சர்ச் தலைவர் :

ஸ்ரீ சிவாய சுப்பிரமணிய சுவாமிகளுக்கு

அருட்பிரசாதம் வழங்கும் காட்சி (28 — 1 — 83).

உ
குருபாதம்
# " ஞானசம்பந்தம் "
தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 || 10-2-83 || இதழ் 3

## உட்பொருள்



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ
குருபாதம்

### ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[★]—

கூரியவெம் பாசக்
குளிர்நீங்க நின்னருளாஞ்
சூரியனெப் போதுவந்து
தோன்றுமோ — பாரறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர்
கொள்ளையிட்ட மாமதுரை
யிட்டமிட்ட சொக்கநா தா.

— சில பிரதிகளில்
காணப்படும் பாடல் 3

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 23
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 25
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 250

உ

குருபாதம்

## சிற்ப வேலைப்பாடமைந்த கருங்கற்கள்

# ஏல விற்பனை விளம்பரம்

---

**ஏலநாள்:- 18—2—1983 வெள்ளிக்கிழமை மாலை 3 மணி**

தஞ்சவூர் ஜில்லா, மயிலாடுதுறை தாலுக்கா, தருமபுரம் ஆதீனமடத்துக்குச் சொந்தமான தருமபுரத்தில் சிற்ப வேலைப் பாடமைந்ததும், திருக்கோயில் கருவறை விமானம் கட்டுவ தற்குத் தகுதியானதுமான கருங்கற்கள் இருக்கின்றன. மேற்படி கற்களை 18—2—83 வெள்ளிக்கிழமை மாலை 3 மணி அளவில் தருமபுரத்தில், ஆதீன மடத்தில், வழங்கிவரும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.

ஏலம் கேட்பவர்கள் ரூ 2000/- (ரூபாய் இரண்டாயிரம்) டெபாசிட் செலுத்தவேண்டும். முடிவு செய்யப்பட்ட ஏலதார் அதன் கிரயத் தொகையை உடன் செலுத்தவேண்டியது. கற்களை பார்க்கவிரும்புவோர் சொந்தச் செலவில் தருமபுரத்தில் வந்துபார்த்துக்கொள்ளலாம். மற்ற ஏல நிபந்தனை விபரங்களை ஆதீன மடம் அலுவலகத்திலோ அல்லது தபால் மூலமோ தெரிந்துகொள்ளலாம்.

### கற்கள் விபரம்

யாளவரி கற்கள் 87, கபோத கற்கள் 66, முக உத்திரக் கற்கள் 41, அல்லிக்கால் வர்க்கக் கற்கள் 48, தேவகோஷ்ட வர்க்கக் கற்கள் 61, போதியல் கற்கள் 52, சின்ன போதியல் கற்கள் 36. அடித்தளவர்க்கக் கற்கள் 37, போதியல் கமலக் கற்கள் 32. ஆக மொத்தம் கற்கள் 460.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
உத்தரவுப்படி.

தருமபுர ஆதீனம்,
தருமபுரம்,
மயிலாடுதுறை 609 001.
7—2—1983.

வி. இராமையா பிள்ளை,
மேலாளர்.

உ

குருபாதம்

## பலகைக்கும் – விறகுக்கும் ஆகக்கூடிய

## மாமரங்கள்

# ஏல விற்பனை விளம்பரம்

---

ஏலநாள்:- **16—2—83 புதன்கிழமை மாலை 3 மணி**

தஞ்சாவூர் ஜில்லா, மயிலாடுதுறை தாலுக்கா, தருமபுரத்தில் ஆதீன மடத்துக்குச் சொந்தமான ஆனந்தபரவசர் பூங்காவில் பட்டுப்போனதும் காய்ப்பு இல்லாததுமான மாமரங்கள் 28 (சுமார் மதிப்பு 300 வண்டி) பலகைக்கும், விறகுக்கும் ஆகக்கூடியவற்றை 1983-ம் வருடம் பிப்ரவரி மாதம் 16-ந்தேதி புதன்கிழமை மாலை 3 மணி அளவில் ஆதீனமடத்தில் ஆதீனத்தில் வழங்கிவரும் நிபந்தனைகளுக்குட்பட்டு பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும். ஏலம் கேட்பவர் ரூ. 1000/– (ஓராயிரம்ரூபாய்) டெபாசிட் செலுத்தி ஏலம் கேட்கவேண்டும். ஏலம் எடுத்தவர் ஏலத் தொகையை உடன்செலுத்தவேண்டும். மற்ற ஏல நிபந்தனை விபரங்களை ஆதீன மடம் அலுவலகத்திலோ அல்லது தபால் மூலமோ தெரிந்துகொள்ளலாம்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
உத்தரவுப்படி,

தருமபுர ஆதீனம்,
தருமபுரம்,
1—2—1983.

**வி. இராமையா பிள்ளை,**
மேலாளர்.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 42 | துந்துபி - தை - 10—2—83 | இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# திருமுதுகுன்றத் திருப்பணிசெய்யச் சேரவாரும் செகத்தீரே

**நமது கடமை :**

வானளாவிய கோபுரங்களோடு கூடிய ஆயிரம் ஆயிரம் திருக்கோயில்களைத் தன்னகத்தே கொண்டிலங்கும் பெருமை தமிழ்நாட்டுக்கே உரியது. இந்தியாவில், ஏன் உலகில்வேறு எங்கும் இத்துணை கலைவளம் நிறைந்த கோயில்களைக் காணல் இயலாது. தமிழகத் திருக்கோயில்கள் சிலர் நினைப்பதுபோல் ஒரு சமயத்தாரின் வழிபாட்டு நிலையங்களாகமட்டும் திகழ்வன அல்ல. பாரம்பரியம் மிக்க தமிழ்மக்களின் இராண்டாயிரம் ஆண்டுக்காலப் பண்பாடு, வாழ்வியல், கலை, கலாசாரங்களின் நிலைபெற்ற சான்றுகளாக இவை துலங்குகின்றன. இத்தகு கோயில் ஒன்றை இன்று உருவாக்குவது அரிதினும் அரிது.

புதிதாக எதையும் படைக்க இயலாத நிலையில், இருக்கும் பழைய கலை வடிவங்களையாவது பேணிக் காப்பது நமது கடமையாகிறது. தமிழராகப்பிறந்த ஒவ்வொருவருக்கும் இதில் உரிய பங்கு உண்டு.

## கண்மூடி இருக்கலாமா ?

தமிழகத்தை ஒருமுறை வலம் வந்தால் நமது புராதனக் கலைக் கூடங்களாகிய திருக்கோயில்களில் பல, போற்றுவார் இன்மையின் சிதைந்து உருக்குலைந்திருப்பதைக் காணலாம். தமிழக அரசும், இந்து அறநிலைய இலாகாவும், இப்பணியில் ஓரளவே உதவமுடிகிறது. எனவே, அங்கங்கே வாழும் மக்கள் ஒன்றுகூடி ஒருங்கிணைந்து, தத்தம் பகுதிகளில் சிதைந்தும், ஒளி குன்றியும் வரும் திருக்கோயில்களைப் பாதுகாப்பதை அவ்வப் பகுதியில் வாழும் அவ்வச்சமய மக்கள் அவரவர்களின் முக்கியக் கடமைகளில் ஒன்றாகக் கருதவேண்டும். இவ்வாறான முயற்சியில் முன்னின்றுசெயற்படுவோர் அவ்வக்கோயில்களைக் கட்டினோர்களின் மனப்பூர்வமான ஆசிக்கு உரியவராவர். ஆன்றோர்களின் ஆசி அன்பர்களை வாழ்வாங்கு வாழ்விக்கும். இத்தகு முயற்சி மேற்கொள்வார்க்கு ஒல்லும் வகையால் துணை நின்று உதவுதல் தமிழ்மக்களின் தலையாய கடன். தமது இல்லத்தில் ஒரு சிறு வெடிப்பு ஏற்பட்டால் அதைக் கண்டதும் துடித்துப் போகும் தனிமனிதன், சமூகம் முழுவதற்கும் சொந்தமான திருக்கோயில்கள் சிதைவதைக் கண்டு, கண்மூடி இருப்பது அறமன்று.

## பழமலைநாதர் திருக்கோயில் :

பாரம்பரியம் மிக்க நமது சைவத்திருக்கோயில்களுள் தென் ஆர்காடு மாவட்டம் விருத்தாசலத்தில் (திருமுதுகுன்றம்) இருக்கும் அருள்மிகு விருத்தகிரீசுவரர் திருக்கோயில் பல்வேறு சிறப்புக்கள்மிக்கதாகத்திகழ்வது. எழுநிலைக்கோபுரங்கள் ஐந்துடன் மிளிர்வது. மிகப்பெரிய அழகியமதிற்சுவரும், எண்ணற்ற சுற்றுக்கோயில்களும், பேரழகுவாய்ந்த மண்டபங்களும் இத் திருக்கோயிலுக்கு அழகுசேர்ப்பன. மணிமுத்தாநதி வலமாகச் சூழ்ந்துவர அதன் தென்மேல்கரையில் திகழும் இப்பெரிய சிவாலயம் சைவ - சமய அருளாளர்களாகிய தேவாரம் பாடியருளிய மூவராலும் பாடல்பெற்ற சிறப்புமிக்கது. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பன்னீராயிரம் பொன் வழங்கிய இறைவன் அருள்மிகு விருத்தாம்பிகை, பாலாம்பிகை உடனாக இங்கே

பழமலைநாதனாக எழுந்தருளியிருந்து அருள்பாலிக்கிறான். கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள் எண்ணற்ற பனுவல்களால் இத்தலத்து இறைவனை ஏற்றிப் போற்றியிருக்கிறார். குமாரதேவர், அம்மை அருள்பெற்று அருட்பாமாலை புனைந்திருக்கிறார்.

## உள்ளொளிபிறக்கட்டும் :

அறநிலையத்துறையின் பராமரிப்பில் உள்ள இத்திருக் கோயில், பெரும் திருப்பணியை எதிர்நோக்கியிருக்கின்றது. அறநிலைய இலாகாவின் உதவியால் பெரும்பொருட்செலவில் கிழக்கு மற்றும் மேற்கு இராஜகோபுரங்கள் திருப்பணி செய்யப் பெற்றுள்ளன. திருப்பணிக்கமிட்டி அமைக்கப்பெற்று உள்ளூர் அன்பர்களாலும், வெளியூர் அன்பர்களாலும் திருப்பணிகள் மெல்ல மெல்ல நடைபெற்றுவருகின்றது. செல்வங்கொழிக்கும் பெருவணிகத்தலம் விருத்தாசலம். செல்வர்கள் தங்கள் வருவாயின் ஒரு பகுதியை மனமுவந்து வழங்க முன்வந்தால் இத்திருப்பணி முற்றாக விரைவில் நிறைவேறுதல் ஒருதலை. "அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்றபடி பழமலைநாதன் அவர்கள் உள்ளத்தில் புகுந்து இத்துறையில் உரியன செய்யத் தூண்டியருளுவான் என எதிர்பார்க்கிறோம்.

## தருமைக் குருமணி வருகை :

இன்றியமையாத் திருப்பணிகளையேனும் விரைவில் முற்றுவித்துக் குடமுழுக்குப் பெருவிழாச் செய்ய அன்பர்கள், கும்பாபிஷேகத் திருப்பணிக்குழு ஒன்றை அமைத்து தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் அவர்களை எழுந்தருள்வித்து அண்மையில் 17—1—83 அன்று துவக்க விழாவை நடத்தினர். திருமுதுகுன்றத்தில் ஏழரையாண்டுகள் வாழ்ந்திருந்து நா. வே. ச. அ. தேவாரப் பாடசாலையில் பயின்று பழமலைநாதர் திருவடிகளில் பக்திபூண்டிலங்கும் குருமணி அவர்கள், ஞானபீடமேறியதற்குப்பின் முதன்முதலாக இங்கே எழுந்தருளினார்கள். எல்லா இறையவர் திருமேனிகளுக்கும் எண்ணெய்க் காப்பிட்டு, விசேட அபிடேகங்கள் செய்வித்து, பரிவட்டங்கள் சார்த்தி சிறப்பு வழிபாடு செய்து, திருக்கோயில் பணியாளர்களுக்கும் சிவாசாரியர்களுக்கும் புத்தாடைகள் வழங்கி திருப்பணியைத் தொடங்கிவைத்து அன்பர்களிடையே அருளாசி வழங்கியருளினார்கள்.

**விருப்புடையோர் பலர் :**

தொட்டதைத் துலங்க வைக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசிவிசேடத்தால் விழாவில்பங்கேற்ற அன்பர்கள் பலரும் கும்பாபிஷேக விழாவிற்காக ஏறத்தாழ முப்பதாயிரம்ரூபாய்களை மேடையிலேயேவழங்கினர்.கொடுக்க விருப்பமுடையவர்களாய்ப் பலர் இருப்பதும், தக்கவர்கள் முயற்சி மேற்கொண்டு, முன்னின்று செயற்பட்டால் உரிய தொகை கிடைப்பது அத்துணை அருமையன்று என்பதும் நன்கு வெளிப்பட்டது. பலரும், திருக்கோயிலின் ஒவ்வோர் பகுதியைத் தத்தம் செலவில் செய்துதரவும் முன்வந்தனர். ஒல்லும் வகையால் ஆவன செய்ய முன்வந்த அன்பர்களுக்கு ஆசிகூறி மகாசந்நிதானத்தில் பிரசாதங்கள் வழங்கியருளினார்கள்.

**திருவருள்துணை :**

பழமலைநாதர் திருக்கோயிலில் குடமுழுக்கு விரைவில் நிகழும் என்பது உறுதி. தமிழ்நாட்டில் உள்ள எல்லா ஆலயங்களையும் இவ்வாறு புதுக்கிக் குடமுழுக்குச் செய்விக்க ஆங்காங்குள்ள பேரன்பர்கள் முயற்சி மேற்கொண்டு பணிபுரிதல் இன்றியமையாதது. போற்றுதலையோ, பெருமையையோ எதிர்பாராது, நமது பாரம்பரியப் பெருமையைப் பாதுகாக்க முயல்வாரைப் புகழ்தானே நாடிவரும். திருவருள் துணைநிற்கும். விருத்தாசலம் திருக்கோயில் திருப்பணியில் முன்னிற்கும் அன்பர்களுக்குக் குருவருளும் திருவருளும் சித்திக்குமாக.

தெய்வப்பணி செய்யச் சித்தம் திரும்பிவிட்டால்
வையம் வளம் சுரக்கும் அன்றே பராபரமே.

---

எந்தை யிவனென் றிரவி முதலா விறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயிலாகத் திகழ்வானை
மந்தி யேறி யினமாய் மலர்கள் பலகொண்டு
முந்தித் தொழுது வணங்குங் கோயின் முதுகுன்றே.

நீடு மலரும் புனலுங்கொண்டு நிரந்தரம்
தேடு மடியார் சிந்தை யுள்ளே திகழ்வானைப்
பாடுங் குயிலி னயலே கிள்ளை பயின்றேத்த
மூடுஞ் சோலை முகிலேய் கோயின் முதுகுன்றே.

— திருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

## கும்பகோணம் – சிவனடியார் திருக்கூட்டத்தின் 35 ஆவது ஆண்டு விழாவில்

வழங்கியருளிய

# ஆசியுரை

31—12—1982

" சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றெழுந் தார்க்கெலாம்
குரவ னார்உறை யும்குட மூக்கிலே." — அப்பர்

**அறநெறி :**

மனிதன் தன்வாழ்வில் அடையவேண்டிய பயன்கள் நான்கு என்பர். அவை, அறம் பொருள் இன்பம் வீடு என்பன வாம். இவற்றை முறையாகத் தெரிந்துகொண்டு அவற்றின் பயனை அடைவதற்கே நூல்களைப் படிக்கின்றோம். இக்கருத் தைத்தான் பவணந்தி முனிவர், "அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே" என்று நன்னூலில் நவின்றுள்ளார். இந்நான்கனுள் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின் துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவ தல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின் நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம். இதனால் உலக வழக்கில் நாம் அறிந்து அனுபவிக்கக்கூடியனவாக இருப்பவை அறம், பொருள், இன்பம் எனும் மூன்றுமேயாம். அறம் பொருள் இன்பமான மூன்றையும் அறிந்து அவற்றின்வழி நடத்தலே அறநெறி எனப்படுகின்றது. இதனைச் சேக்கிழார்பெருமான் மனுநீதிகண்ட சோழன் வரலாற்றில் அறிவிக்கின்றார்.

" அறம்பொருள் இன்பமான அறநெறி வழாமற் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகம் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி திருமணி வயிற்றில் மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப் பேர்அரிக் குருளை அன்னான்"

இப்பாடலிலுள்ள 'அறம் பொருள் இன்பமான அறநெறி' எனும் வரி ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. அறமாவது, உலகிலுள்ள பொருள்களையும் இன்பங்களையும் தனக்கும் பிறருக்கும் தீங்கின்றி அனுபவிக்கச்செய்வது என்பதாம். பொருளை ஈட்டுவதற்கும் இன்பத்தை அனுபவித்தற்கும் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. ஆனால் அப்பொருளை ஈட்டுகிறபொழுதும் இன்பத்தைத் துய்க்கிறபொழுதும் தனக்கும் பிறர்க்கும் தீங்கு வராமல் நடந்துகொள்வதே அறமாகும். இவ்வறத்தின்வழிப் பொருளை ஈட்டுதலும் அறத்தின்வழியே இன்பம் துய்த்தலும் அறநெறி என்பது நம் சைவச் சான்றோர்களின் கருத்தாகும். இது சேக்கிழார் வாக்காலும் தெளிவாகின்றது.

## ஔவை அறம் :

இவ்வறம் பொருள் இன்பம் என்பனபற்றி ஔவைப் பிராட்டியாரும் ஒரு பாடலில் விளக்குகின்றார். அறம் என்பது ஒரு மனிதன் தன்னிடத்துள்ள அறிவு ஆற்றலையும் தன்னால் ஈட்டப்பெறும் பொருளையும் மனமுவந்து தக்கார்க்கு ஈதல் என்று கூறுகின்றார். பொருள் என்பது, அறத்தின்வழியே, அதாவது தனக்கும் பிறருக்கும் தீங்கின்றி ஈட்டுதலாகிய அறத்தின் வழியே சேமிப்பதாகும். இவ் அறத்தின்வழிவாராப்பொருள் கண்ணுக்குப் பொருளாகத் தோன்றினும் அது அறம், இன்பம் வீடு ஆகிய பயன்களைத்தாராது ஆதலின், அப்பொருளைப் பொருளல்ல என்றனர் ஆன்றோர். இக்கருத்தைத் திருவள்ளுவரும்,

" அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புறள விடல் "

என்று கூறுகின்றார். தம்மாட்டு அன்பும் பிறர்மாட்டு அருளும் கொண்டு ஈட்டப் பெறும் பொருளே பொருள் என்பது வள்ளுவர்கருத்து. இக்கருத்தைத்தான் தனக்கும் பிறர்க்கும் தீங்கு வாராவகையில் ஈட்டப்பெறும் பொருளே பொருள் என்றனர் ஆன்றோர். இவ்வறத்தைச் சிந்திக்காமல் எப்படி எப்படி எல்லாமோ ஈட்டப்பெறும் பொருள் முடிவில் தமக்கும் பிறர்க்கும் நாட்டிற்கும் தீங்கினையே தரும் என்பதை நாட்டு நடப்பே நமக்கு உணர்த்திநிற்கிறது.

இன்பம் என்பது எஞ்ஞான்றும் காதல் இருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டதே என்பர் ஔவைப் பிராட்டியார். இங்கும் அறத்தின்வழி பெறும் இன்பமே இன்பமாய் அமையும். எனவே பொருளிற்கும் இன்பத்திற்கும் அறமே அடிப்படை என்பது தெளிவாகும். இக்கருத்தினையே புறநானூற்றுப் புலவர் கோவூர் கிழாரும்,

> " சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
> அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல "

என்று கூறுகின்றார்,

**பரனை நினைதலே அறம் :**

அறத்தினை நன்குணர்ந்து அவ்வறத்தின் வழிப் பொருளை ஈட்டலும் இன்பத்தைத் துய்த்தலும் யாருக்கு வரும் எனின்? எப்பொழுதும் இறையுணர்வு உள்ளவர்கட்கே வரும் என்று ஔவைப் பிராட்டியார் கூறுகின்றார். கண்ணுக்கும் கருத்திற்கும் புலனாகும் இவ்வறம், பொருள், இன்பம் ஆன அறநெறிக்கு அடிப்படை. சாதாரணமனிதனின் கண்ணுக்கும் கருத்திற்கும் புலனாகாத இறையுணர்வே என்பது ஆன்றோர்களின் கருத்தாகும். இறையுணர்வில்லா அறம், ஊற்றுஇல்லாத ஓடையும், மணமில்லாத மலரும், அடித்தளமில்லாக் கட்டிடமும்போல் நிலையான பயன் அற்றதாய் முடியும். இக்கருத்தில்தான் ஔவைப் பிராட்டியார், " பரனை நினைந்து " என்று கூறுகின்றார். இக்கருத்துக்கள் அமைந்த பாடல்,

> " ஈதலறம் தீவினைவிட் டீட்டல் பொருள் எஞ்ஞான்றும்
> காதல்இருவர் கருத்தொரு மித்து — ஆதரவு
> பட்டதே இன்பம் பரனை நினைந்து இம்மூன்றும்
> விட்டதே பேரின்ப வீடு "

என்பதாம், இப்பாடலிலுள்ள, ' பரனை நினைந்து ' எனும் சொற்களை இடைநிலைத் தீவகமாகக் கொண்டு, பரனை நினைந்து ஈதல் அறம், பரனை நினைந்து தீவினைவிட்டு ஈட்டல் பொருள், பரனை நினைந்து காதலிருவர் கருத்தொருமித்தாதரவு பட்டதே இன்பம் எனப்பொருள் கொள்ளல் தக்கது. எனவே பரனை நினையாவிடின் இவை எல்லாம் முழுமையான பயனைத்தரமாட்டா. இக்கருத்துக்களால் அறம் பொருள் இன்பம் எனும் மூன்றும் அறநெறி என்றும் இவ்வற நெறிக்கும் அடிப்படையாய் உள்ள அறம் பரனை நினைதலே என்றும் உணர்ந்து கொள்ளலாம். ஆகவே

எல்லாவற்றிற்கும் அடிப்படையாய் உள்ள அறம் இறையுணர்வு என்பது தெளிவாகும்.

**சித்தியார் அறம் :**

இக்கருத்துக்களிலுள்ள அடிப்படை அறமாகிய இறை யுணர்வு பற்றி இன்னும் விளக்கிக் கூறுவாரைப் போன்று அருணந்தி சிவாசாரியார் தமது சிவஞான சித்தியாரில்,

" மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையில் கொண்டங்(கு) இச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுதல் அகற்றி வாழும் செயலற மானல் யார்க்கும்
முனம்ஒரு தெய்வம்எங்கும் செயற்குமுன் னிலையாம்அன்றே"

என்று அருளுகின்ருர். மனத்தின் செயலாகிய பரனை நினைதல் அறம் என்று ஔவைப் பிராட்டியார் கூறியதை மேலும் விளக்கி மந்திரங்கள்சொல்லுவதாகிய வாக்கின் செயலையும் கையில்மலர் கொண்டுஅர்ச்சித்தலாகிய மெய்யின்(உடல்)செயலையும்இங்கே சேர்த்து அறம் என்று சுட்டி விளக்குகின்ருர் அருணந்திசிவம்.

எனவே இறையுணர்வு எனும் அடித்தளத்தில் எழுப்பப் பெறுகின்ற மாளிகையே அறம் பொருள் இன்பமான அறநெறி. அதுவே சிவநெறி, அதுவே மெய்ந்நெறி.

**அன்ருடவாழ்வில் அறங்கள் :**

இங்ஙனம் நுட்பமாகவும் சுருக்கமாகவும் விளக்கப்பெற்ற அறம், பருப்பொருளாகவும் செயல் முறைகளாகவும் சிவஞான சித்தியாரில் இன்னெரு பாடலில் விளக்கப் பெற்றுள்ளது. நம் முடைய வாழ்வுநெறி முறைகள் எல்லாமே அறத்தின் அடிப் படைமீதுதான் எழுப்பப்பட்டுள்ளன என்று சுட்டுகின்ருர் அருணந்தி சிவாசாரியார்.

" ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம்,
உபசாரம், உறவு, சீலம்,
வழுக்கிலாத் தவம், தானங்கள்,
வந்தித்தில், வணங்கல், வாய்மை
அழுக்கிலாத் துறவு, அடக்கம்,
அறிவொடு அர்ச்சித்தல், ஆதி
இழுக்கிலா அறங்கள் ஆனல்
இரங்குவான் பணிய றங்கள் "

என்பது அப்பாடல். இப்பாடலில் அடங்கியுள்ள அறங்களாவன: தமக்குற்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல், எவ்வுயிர்க்கும் அன்புடையராயிருத்தல், பிறஉயிர்கள் மாட்டுக் கருணை உடைராயிருத்தல், அகத்தும்புறத்தும் தூயராயிருத்தல், பிறரை அகமும் முகமும்மலர உபசரித்தல், பிறருடன் பண்பு பாராட்டி உறவுகொள்ளுதல், நன்னெறியுடையராயிருத்தல், வழுவில்லாத் தவநெறியுடையராயிருத்தல், நல்லோருக்குப் பொருளை வழங்கல், பெரியோரைக்கண்டவழி கைகூப்பி வழிபடுதல், அடுத்து தலை நிலம்தோய வணங்குதல், வாக்கினால் மெய்பேசுதல், அழுக்கில்லாத் துறவு நெறியுடையராயிருத்தல், எல்லாம் தெரிந்தும் அடங்கி இருத்தல், ஆண்டவனை மலர்களிட்டு அர்ச்சித்தல் எனும் இவையும் இவைபோல்வன பிறவும் அறங்களாகும்.

## அறநெறியே சிவநெறி :

இங்ஙனம் கூறப்பெறும் நம்முடைய வாழ்க்கை நெறி முறைகள் அனைத்துமே அறத்தோடு பின்னிப் பிணைந்து இருப்பதனைச் சைவநூல்களாலும் இலக்கியங்களாலும் உணரலாம். நாம் செய்யும் எச்செயலுமே அறத்தோடு மிளிர்வதனை இப்பாடலால் தெளியலாம். வாழ்வில் தொட்ட தொட்ட இடமெல்லாம் அறநெறி பின்னிப் பிணைந்து வாழ்வைச் செம்மைப் படுத்தி வருவதனைச்சிவஞானசித்தியார் இப்பாடலால் விளக்குகின்றது. இதுவரை சிந்தித்த சிந்தனையின் கருத்துக்களைத் தொகுத்துக்காணலாம். அறம், பொருள், இன்பம், வீடு அடைதலே மனித வாழ்க்கையின் குறிக்கோள். இவற்றில் வீடு எனும் ஒன்றுமட்டும் இம்மை வாழ்வில் உணர்ந்து செயல்படலாமே தவிர அடையமுடியாது. இம்மையில் அறம், பொருள்' இன்பம் எனும் மூன்றுமான அறநெறியைச் செய்தல் இயலும். இவ்வறநெறியே சிவநெறி எனப் போற்றப்பெறுகின்றது. இவ்வறநெறிக்கு அடிப்படையானது இறையுணர்வு என்னும் மூல அறமாகும். இக்கருத்தை ஔவைப்பிராட்டியாரும் அருணந்தி சிவமும் ஏற்று உரைத்துள்ளனர்.

## வாழ்த்து :

இவ்விறையுணர்வை அடிப்படையாகக் கொண்ட அற நெறியாம் சிவநெறியைக்கடந்த 35 ஆண்டுகளாகக் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம் கைக்கொண்டு மக்களிடையே

பரப்பிச் செயற்படுத்தி வருவது பாராட்டுதற்குரியது. இக்கூட்டத்தினர் வாரந்தோறும் இடையீடின்றி ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் பக்தர்களுடன் சென்று வழிபாடாற்றித் தமக்கும் பிறர்க்கும் நலம் சேர்க்கும் அறநெறியைச் சிறப்பாகச் செய்து வருகின்றனர். என்றும் இந்நெறியினைக் கடைப்பிடித்து,

"என்றும் இன்பம் பெருகும் இயல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்"

எனும் சேக்கிழாரின் வாக்கிற்கிணங்கச் சிறப்புற்றுத் திகழ எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

"மன்னுக தில்லை வளர்கநம் பக்தர்கள்"



---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Amirthakadeswaraswami Devasthanam, Tirukkadaiyur.

The Poojas are offered as they ought to be.

6—2—83. (S-d) P. Sabanayagam I. A. S.
(Retired)

## தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசிக்க அமெரிக்கா–ஹவாய்– ஸ்ரீ சிவாய சுப்பிரமணிய சுவாமிகள் தம் அடியவர்களொடு தருமை வருகை.

அமெரிக்கா நாட்டில் ஹவாய்த் தீவில் சைவ சித்தாந்த சர்ச் என்ற பெயரில் திருமடம் தோற்றுவித்து அந்நாட்டில் அமெரிக்கர் பலரைச் சிவனடியார்களாக உருவாக்கிச் சிவபக்தி யையும் சைவ சித்தாந்தச் செந்நெறியினையும் பரப்பிவரும் அமெரிக்கராகிய ஸ்ரீ சிவாய சுப்பிரமணிய சுவாமிகள் தம் சீடர் களோடு 29—1—83 வெள்ளிக்கிழமை காலை 10 மணி அளவில் தருமையாதீனத்திற்கு வருகைதந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களைத் தெரிசித்துச் சைவ சித்தாந்த விளக்கங்கள் பல வற்றை வினவினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சைவ சித்தாந்தத் தத்துவத்தின் மேன்மை அவர்கட்கு எடுத்து விளக்கினார்கள். அதன் சுருக்கம் வருமாறு:-

சைவ சமயத்துக்கு வேதம் பொதுநூல். ஆகமம் சிறப்பு நூல். திருமுறைகளும், சித்தாந்தச் சாத்திரங்களும் அவற்றின் வழிவந்த விளக்கநூல்கள்.

சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களும் நித்தியப்பொருள்கள். அதாவது உள்பொருள்கள் என நிலை நாட்டி அவற்றை விளக்குகிறது.

பதி:- சிவபெருமானே பரம்பொருள். குணம் குறிகளைக் கடந்தநிலை பரசிவம் எனவும் உயிர்களை ஆட்கொள்ள அந்நிலை யினின்று கீழே இறங்கிவரும் நிலையில் சொருபசிவம் எனவும் அப்பரம்பொருளின் இயல்புகளை இருவகைப்படுத்திக் கூறுவர், அப்பரம்பொருள் தன்வயத்தனாதல், இயற்கை உயர்வினனாதல், தூயஉடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களில் நீங்குதல். பேரருளுடைமை, வரம்பிலாற்றலுடைமை முடிவில் இன்ப முடைமை என்னும் உயிர்களின்மேம்பட்டகுணங்கள் உடைய நிலையில் அவ்விறைவன் எண்குணத்தான் எனப்பெறுவான்.

இறைவன் உயிர்களை ஆட்கொள்ளும் பொருட்டு இயற்றும் தொழில்கள் படைத்தல், காத்தல். அழித்தல், மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களாகும்.

சிவபெருமானது கருணையின் வடிவமே பராசக்தி. அக் கருணை இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி எனமூவகைப்படும். இறைவன் அச்சக்திகளைப் பொருந்தி நின்று உலகைத் தொழிற் படுதுவார்.

பசு :- பாசத்தால் கட்டுப்பட்ட நிலையில் உயிர் பசு எனப் பெயர் பெறும். பசுக்கள் எண்ணில்லாதவை. அநாதியாகவே ஆணவ இருளால் மறைக்கப்பட்டிருப்பவை. இருவினை புரிபவை. இருவினைப் பயன்களை அனுபவித்தற்கு பிறந்திறந் துழல்பவை. எண்ணில்லாத பிறப்பிறப்புக்களை அடையும் உயிர், கல்வி கேள்வி அறிவுபெற்றுச் சிவபுண்ணியத்தால் இரு வினைஒப்பு, மலபரிபாகம் உற்று திருவருள் பதியப்பெற்றுக் குருவின் தீட்சையினுல் மெய்ஞ்ஞானம் பெறும்.

பாசம் :- இது ஆன்மாக்களைப் பந்தித்திருத்தலின் பாசம் எனப்படும். ஆணவம் உயிர்களை, செம்பிற் களிம்புபோல அநாதியாகவே பற்றி நிற்பது. இதனைப்போக்க மாயை கன்மம் எனப்படும், உடல் உலகம் செயல் ஆகிய மலங்களை உயிர் கட்குத் தந்து ஆணவத்தைப் போக்கி இறைவன் உயிர்கட்கு வீடுபேறு அருள்வான்.

முத்தி :- ஒவ்வொரு சமயமும் முத்தி பற்றிக்கூறும் விளக் கங்களில் வேறுபடுவதுண்டு சைவ சித்தாந்தம் இறைவனது திருவடிப்பேற்றையே முத்தி எனக்கூறுகிறது.

இவற்றைச் சுருக்கமான முறையில் விளங்கக்கூறும். திரு மந்திரப்பாடல் அறிதல் பொருந்தும்.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அனுதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கில்பசு பாசம் நிலாவே.

என்ற பாடலை இங்குக் கூறுதல் பொருந்தும், என்று விளக்கி யருளினுர்கள்.

தருமை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ சிவாய சுப்பிரமணிய சுவாமிகளுக்குப் பொன்னுடை போர்த்தி ஆதீன வெளியீடுகள் பலவும் வழங்கி ஆசியருளினுர்கள். அனைவ ருக்கும் ஆதீனச்சார்பில் நண்பகல் விருந்து அளிக்கப்பெற்றது. அனைவரும் மகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்து ஆசிபெற்று விடைபெற்றுர்கள்.

---

## குத்தகையைக் கொடு, கோயில் சொத்தை அனுபவி, தருமையாதீனம் பேச்சு

கோயில் சொத்து மக்களுக்கு சொந்தம் தானே. அதை அனுபவித்தால் என்ன என்கின்றனர். கோயில் சொத்தை யாரும்எடுக்கக்கூடாது. அதை அனுபவிக்கலாம். குத்தகையைக் கொடு கோயில் சொத்தை அனுபவி என்று ஆக்கூர் வேலவன் கோட்டக் குடமுழுக்கு விழாவில் ஜனவரி 19ம் தேதியன்று தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் கூறினர்.

ஆக்கூர் ஸ்ரீ தான்தோன்றீஸ்வரர் ஆலயத்தில் புதிதாக அமைக்கப்பட்டுள்ள வேலவன் கோட்டக் குடமுழுக்கு விழாவையொட்டி முதல் நாள் இரவு தருமையாதீனம் குருமகா சந்நிதானம் கோயிலில் எழுந்தருளினர்கள். வேலவன் கோட்டத்தைத் தம்சொந்தப்பொறுப்பில் அமைத்துகுடமுழுக்குவிழா நடத்தும் ஈராக் ஆடிட்டர். ந. ராசாராமன், கி. நடேச பிள்ளை, புலவர் மு. குருமூர்த்தி, முன்னாள் கலெக்டர் வி. ஆறுமுகம் மற்றும் பொதுமக்கள் ஆகியோர் ஆலயவாயிலில் தருமை யாதீன குருமகாசந்நிதானத்தைப் பூரணகும்ப மரியாதையோடு வரவேற்றனர். தருமையாதீனம் குருமகாசந்நிதானம் ஆலயம் யாகசாலை ஆகியவற்றில் வழிபாடுநடத்தி வேலவன்கோட்டத்தில் பிரதிஷ்டை செய்துள்ள ஸ்ரீ வள்ளி தெய்வயானை சமேத ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு மருந்து சார்த்தினர்கள். புலவர் மு. குருமூர்த்தி வரவேற்று பேசினர். ஆக்கூர் ஆலை அதிபர் டி. ஆ. அகோரம் தருமையாதீன குருமகாசந்நிதானத்துக்கு பொன்னுடைபோர்த்திப் பாராட்டிப்பேசினர். தருமையாதீனம் குருமகா சந்நிதானம் தொடர்ந்து பேசியதாவது:-

மதியால் வித்தகனாகி மனதால் உத்தமனாகி என்று அருணகிரிநாதர் பாடியுள்ளார் வித்தகனாக மட்டும் ஒருவன் இருக்கக்கூடாது. உத்தமனாகவும் இருக்கவேண்டும். என்கிறார் அருணகிரிநாதர். அதாவது வல்லவனாக மட்டும் இல்லாமல் நல்லவனாகவும் இருக்கவேண்டும். வல்லவன் எல்லோரும் நல்லவனாக இருப்பதில்லை. நல்லவன் எல்லோரும் வல்லவனாக இருப்பதில்லை. எனவே வல்லவனாகவும் நல்லவனாகவும் இருக்க வேண்டும். ஜெகஜாலப் புரட்டனாகவும் பொய் சொல்பவனாக வும் இருக்கக்கூடாது. மூன்று மணி நேரப் பரீட்சை எழுத

மூன்று மணி நேரம் மட்டும் படித்தால் போதுமா? ஓராண்டு ஒழுங்காகப் படித்தால்தான் மூன்று மணிநேரம் நன்கு பரீட்சை எழுதமுடியும். அரை நிமிடம் மட்டில் தியானம் வைக்கப் பல ஆண்டுகள் பயிற்சி பெறவேண்டும். மேட்டூர் அணையைத் திறந்தால் ஆக்கூர்வாய்க்காலிலே தண்ணீர் வருகிறது. மேட்டூர் அணையைத்திறக்காமல் ஆக்கூர் வாய்க்காலிலே தண்ணீர் வருகிறதா என்று பார்த்தால் எப்படிவரும். மேட்டூர் அணையிலுள்ள நீரைவாய்க்கால்மூலம் பெறுவதுபோல, பரம்பொருளின் அருளை விநாயகர், முருகன், தட்சிணாமூர்த்தி வாயிலாகப் பெறலாம். தந்தைசொத்தில் மகனுக்கு உரிமையுண்டு. அதேபோல தந்தை பட்ட கடனை கொடுக்கும் கடமையும் மகனுக்கு உண்டு அல்லவா? தந்தை சொத்தில்தான் எனக்கு பங்கு உண்டு. தந்தைபட்ட கடனில் எனக்கு பங்கு கிடையாது. என்று மகன் சொன்னால் அதுநியாயமா? ஏற்றுக்கொள்வார்களா? அதுபோலத் தான் கோயில் சொத்தை அனுபவிப்போம், ஆனால் ஒன்றும் கொடுக்கமாட்டோம் என்று சொல்வதும், கோயில் சொத்து மக்களுக்குச்சொந்தம், அதை அனுபவித்தால் என்ன என்கின்றனர் கோயில் சொத்தை யாரும்எடுக்கக்கூடாது. அனுபவிக்கலாம். குத்தகையைக்கொடு, கோயில்சொத்தை அனுபவி இதை சட்டபடி நான் சொல்லவில்லை. கோயில் நிலத்தை, மனையை அனுபவிப்பவர்கள் முடிந்ததைக் கொடுங்கள் என்று நியாயப்படிச் சொல்கிறேன்.

அகோரம் ஐயர் தன் பேரன் பிறந்தநாள் விழாவையொட்டி கோயிலில் வெள்ளை அடித்துக்கொடுத்தார். அதுபோல நீங்கள் வீட்டிலே விழாக் கொண்டாடும்போது முடிந்த அளவு கோயிலுக்குச் செய்யுங்கள். கோயிலுக்குச் செய்தால் சுபீட்சமாய் இருப்பீர்கள். கும்பாபிஷேகத்தின்போது ஒரு நாள் மட்டும் கோயிலுக்கு வந்தால் போதாது. தினமும் வரவேண்டும். கடவுளை வழிபட சாத்திரம் படிக்க வேண்டியதில்லை. எனக்கு நல்ல புத்தியைக்கொடு, நல்ல எண்ணத்தைக்கொடு, நல்ல வாழ்வைக்கொடு என்று பிரார்த்தனை செய்தாலே போதும். நல்வாழ்வு கிட்டும் என்று கூறி கும்பாபிஷேகம் செய்த திரு. ந. ராசாராமனுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்.

*நன்றி — தினமலர்.* 27—1—83.



# சிவநாமாவளி இசைப்பாடல்

திருமுறைக்கலாநிதி,

**வேளூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

இராகம் – சங்கராபரணம் ] [ தாளம் – ஆதி. சதுஸ்ரநடை

வைத்தியநாதா வைத்தியநாதா
வைத்திய நாதாவா
வாலாம்பிகையொடு வாழ்பவனேவேண்டும்
வரம்எனக்கு நீதா (வைத்திய)

1 அய்யனேஎனை அடிமையாக்கிநீ
ஆட்கொள வரவேணும்
அலைகடல்துரும் பாயினேனுக்கு
ஆறுதல் தரவேணும். (வைத்திய)

2 வெந்தவெண்ணீறு பூசியேவெள்ளை
விடைமேல் வருபவனே
விரும்பியேஉள்ளம் உருகும் அன்பர்க்கு
உன்னருள் தருபவனே. (வைத்திய)

3 புகலிடம்வேறு ஏதெனக்குப்
புள்ளூரில் வாழ்கின்றபுனிதனே
பூவும்நீருங்கைக் கொண்டுபோற்றுவார்க்
கருள்தரும் புண்ணியனே (வைத்திய)

4 நாடகஉலகில் நடித்துநடித்து
நலிந்தேனைக் காப்பாய்
நன்றிதுதீதென நானறிந்துகொளும்
நல்வழியினை அருள்வாய் (வைத்திய)

5 அன்றுநால்வர்க்கு அறம்பொருள்இன்பம்
வீடருளிச் செய்தாய்
அரியசெய்கை செய்திட்டஅறுபத்து
மூவரை ஆட்கொண்டாய் (வைத்திய)

6 ஏழுலகுந்தொழும் மூர்த்தியாயினுய்
இடபமேறி வந்தாய்
எரியுங்காற்றுநீர் மண் விண் ணுமாகி
இனியவாழ்வு தந்தாய் (வைத்திய)

7 இசைத்தமிழ்ப்பாடல் கேட்டுக்கேட்டு
இன்பமயம் ஆனுய்
இவ்வுடல்பொருள் ஆவியை உனக்கு
ஈந்தவர் உளமானுய் (வைத்திய)

8 நாவினைக்கொண்டு உன்திருநாமம்
நவில்வார்க் கருள்புரிவாய்
நாடியேஉனை நினைவார்வினைகள்
நலிந்தோடச் செய்வாய் (வைத்திய

9 ஆலவாயில்அன்று அறுபத்துநான்கு
திருவிளையாடல் செய்தாய்
அனற்படுமெழுகு போலுருகுவார்க்கு
ஆளாகி வருவாய் (வைத்திய)

10 மணிவாசகன் பேரன்புக்காளாகி
மாறன்கை அடிபட்டாய்
மன்னன்பாண்டியன் வேண்டிட அன்றுநீ
கால்மாறியே ஆடினுய் (வைத்திய)

11 காலபயம்நீக்கும் காலகாலனே
கண் ணுதற் பெருமானே
கனவிலும்நனவிலும் கைதொழுவாரைக்கண்
ணிமைபோல் காப்பவனே. (வைத்திய)

12 ஒன்றியிருந்துஉற் றுணர்வார்அவர்தம்
உள்ளத்தே வசிப்பாய்
ஓம்நமசிவாய என்றோதுவார்க்கு
உயர்பதமே அளிப்பாய். (வைத்திய)



திருச்சிராப்பள்ளி ஸ்ரீதாயுமானஈசர் திருக்கோயில் மகாகும்பாபிஷேக விழா

தருமையாதீன மௌனமடத்தில் 26 — 1 — 83.



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடன்
ஸ்ரீமத். காஞ்சி காமகோடிபீடம்
ஜெயேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகளும்,
அறநிலைய அமைச்சர், மாண்புமிகு. R. M. வீரப்பன் அவர்களும்.

கட்டுரை எண். 35

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Litt.,
D. P. P. A,. D, U. N., I. U.

**வந்தே சரணம்புகும் அடியாருக்கு வானுலகம்
தந்தே பரிவோடுதான்போய் இருக்கும்; சதுர்முகமும்
பைந்தேன் அலங்கற் பருமணிஆகமும், பாகமும், பொற்
செந்தேன் மலரும், அலர்கதிர்ஞாயிறும், திங்களுமே. 34**

இப்பாடலின் ஒவ்வொரு சொல்லும் பொதுவான பொருளுடன், யோகநூற்பொருளும் தந்து நிற்கின்றன. ஆகவே முதற் பகுதியில் பொதுவான விளக்கங்களையும், இரண்டாம் பகுதியில் யோகநூல் வழியான விளக்கங்களையும் தனித் தனியே காண்போம்.

*முதற்பகுதி*

**அ. வந்தே சரணம் புகும் அடியாருக்குப் பரிவொடு வானுலகம் தந்தே !**

(1) தன்பால்வந்து சரணடையும் அடியவருக்கு அம்பிகை மிக்க அன்புடன் வானுலக வாழ்வினைத் தந்து விடுகிறாள்.

(2) தன்னை நாடிவந்து சரணம் புகுவோருக்குப் போகம் மிக்க சொர்க்கவாழ்வு அல்லது வானுலகில் இருந்து அரசாளும் இந்திரப்பதவி முதலான வானுலகப் பதவிகளையும் அளிக்கிறாள். அடியவர்கள், புலனடக்கம், எவர்க்கும் இன்சொல், பிறர்க்குத் தீங்கு எண்ணாமை முதலிய நற்பண்புகளுடன் வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதால் அவர்களை வானுறையும் நிலைக்கு அன்னை உயர்த்திவிடுகிறாள்.

(3) வேறு புகல் இன்றி வருவோரையும், அல்லற் பட்டு அடைக்கலம் என்று வருவோரையும், அவளே, மேலானவள் என்ற அறிவோடு வருவோரையும் காரணம் பார்த்துப் புறக்கணிக்காமல் அனைவரையும் பரிவுடன் ஏற்று அருள்பாலிக்கிறாள். பல காரணங்களால் அவள்பால் வருவோரைக் குறிக்க

'வந்தே' எனவும், அனைவரையும் அன்புடன் ஏற்று வானுலகளிப்பதால் ' பரிவோடு ' எனவும் கூறினர்.

## ஆ. தான்போய் இருக்கும்

(1) அவர்களுக்கு மேலான வானுலகினை அளித்துவிட்டுத் தான் கீழ்க்கண்ட இடங்களில் எழுந்தருளுவாள்.

(2) பண்புடன் உபசரிக்கும் இயல்புமிக்க ஒருவர் தனது சிறிய வீட்டிற்குவரும் விருந்தினருக்குத் தங்க, காற்றேட்டமான வசதியான ஒரு அறையினைக் கொடுத்துவிட்டுத் தான்போய் திண்ணைக்கோடியில் அல்லது மொட்டைமாடியில் உறங்குகிறார் அல்லவா? அதுபோல் அம்பிகை வருவோருக்கு வானுலகளித்துத் தான்போய்க் கீழ்க்கண்ட இடங்களில் உறைகிறாள்.

(3) ' இருக்கும் ' என்பது ' செய்யும் ' என்னும் வாய்பாடு என்பர் இலக்கணநூலார். "அம்மா நாளைகாலை வரும்," "அக்கா பள்ளிக்கூடம் போயிருக்கும் " என்றெல்லாம் கிராமீயமாகப் பாமரமக்கள் பேசுவது போன்ற ஒருசொல்லமைப்பு 'இருக்கும்' என்பது. " ஆத்தாள் " என அவ்வாறே அழைப்பார் பட்டர். ஏனெனில், அவள் ஏழை எளிய பாமரமக்கள் அனைவருக்கும் அருள் பாலிக்கும் கருணைத் தெய்வம்.

## இ. சதுர் முகமும்

(1) பிரமனின் நான்கு முகங்களில் கலைமகளாய்ச் சென்றிருப்பாள்.

(2) ' சரஸ்வதி ' என்ற நாமம் அவளுக்கு சகஸ்ரநாமத்தில் உண்டு.

(3) ஐந்தொழில் புரியும் ஈசன், படைத்தல் தொழில்புரியும் பொழுது அவள் அவன் சத்தியாக விருக்கிறாள் என்பது சைவ பரமான விளக்கம்.

## ஈ. பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும்

(1) பசுமையான தேன் ஒழுகும் திருத்துழாய் மாலையும் ' கவுஸ்துவம் ' என்னும் பெரிய மணியினையும் அணியும் திருமாலின் மார்பகத்தில் இலக்குமியாகச் சென்றிருப்பாள்.

(2) இறைவன் விஷ்ணுவாய்க் காத்தல் செய்யும் பொழுது அவனது சக்தியான இலக்குமி அம்பிகையே ஆவாள். சைவ சித்தாந்தி, திரு இரத்தினம் செட்டியார் அவர்கள் இவளை 'சைவ லட்சுமி' என்று குறிப்பிடுவார்.

(3) ' மகாலட்சுமி ' என்ற நாமமும் உண்டு. அத்திரு நாமத்திற்கு அடுத்த நாமம் " ம்ருடப் பிரியா" என்பதாகும்.

காத்தல் தொழில் செய்யும்பொழுது இறைவனுக்கு 'ம்ருடன்' என்பது பெயர். மகாலட்சுமி, ம்ருடனுக்குப் பிரியமானவள் ஆகிய இவ்விரு நாமங்களும் அடுத்தடுத்து அமைந்துள்ளமை சிந்தித்தற் குரியதாகும்.

## உ. பாகமும்

(1) இறைவனின் இடப்பாகத்தில் சக்தியாய் இருப்பவளும் அவளே.

(2) அழித்தல் தொழில் புரியும் இறைவனின் ( ஹரன் அல்லது உருத்திரனின் ) சக்தியான இவள் 'ரௌத்திரி' எனப் பெயர் பெறுவாள்.

## ஊ. பொற் செந்தேன் மலரும்

(1) பொன்போல் ஒளிவீசித்திகழும் சிவந்த தேன்மிக்கத் தாமரை மலரிலும் சென்று உறைவாள்.

(2) அம்பிகை விரும்பி உறையும் இடங்களுள் ஒன்று தாமரையாகும். பக்தர்களின் இதயத் தாமரை, ஆதாரக் கமலங்கள் ஆகிய தாமரைகளில் அமரும் அவளை சகஸ்ரநாமம் 'பத்மாஸனா' – தாமரையில் அமர்பவள் எனக் குறிப்பிடுகிறது.

## எ. அலர்கதிர் ஞாயிறும்

(1) அத்தாமரையினை மலரச் செய்கின்ற, பரந்தகதிர்களை யுடைய சூரிய மண்டலத்திலும் அம்பிகை உறைகிறாள்.

(2) 'பானு மண்டல மத்யஸ்த்தா' – 'சூரிய மண்டலத்தில் நடுவில் உறைபவள்' என சகஸ்ர நாமம் கூறுகிறது. "சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே" என்பார் அபிராமி பட்டரும்.

(3) பல உலகங்களுக்குக் கோடிக் கணக்கான ஆண்டு களாக ஆதாரசக்தியினை அளித்துவருபவள் ஆதவளே என்பது விஞ்ஞானிகளின் கருத்து. அக்கதிரவனில் நடுவில் இருந்து அவ்வாற்றலை அளிப்பவளும் அன்னையே என்கிறது நமது மெய்ஞ்ஞானம்.

## ஏ. திங்களுமே

(1) சந்திரனிடத்தும் சென்றிருப்பாள்.

(2) சந்ரமண்டல மத்யகா "– சந்திரமண்டலத்தின் நடுவில் இருப்பவள்" என்பது சகஸ்ரநாமம்.

(3) பௌர்ணமி நாட்களில் அவள் சந்திரனில் பிரஸன்ன மாக இருக்கிறாள் என்றுகருதி தேவி உபாஸகர்கள் அன்று சிறப் பானபூஜைகள் செய்வர்.

(4) கார்த்திகைமாத பௌர்ணமிச் சந்திரனுக்கு 'கௌமுதி' என்று பெயர். " இறைவனின் " கண்கள் என்னும் அல்லிகளை (குமுதங்களை) மலரச் செய்யும் " கௌமுதி '' என சகஸ்ரநாமம் வருணிக்கின்றது.

(ஐ-1) "பரிவொடு வானுலகம்தந்தே" எனவும் "பரிவொடு தான்போய் இருக்கும் " எனவும் இருவழியாலும் இணைத்துப் பொருள் கொள்ளலாம்.

(2) அகன்ற வானுலகத்தை அடியவர்களுக்குத் தந்து விட்டுத் தான் சிறிய சிறிய இடங்களில் உறைகிறாள் அதுவும் 'போய்' உறைகிறாள். தனது கணவனுக்கும், குழந்தைகளுக்கும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்து விட்டு தான் தனது வசதிகளைக் குறைத்துக் கொள்ளுகிறாள். இது தாயின் இயல்பு. இடநெருக்கடி ஏற்படும் பொழுது கணவனுக்கும் குழந்தைகளுக்கும் படுத்துறங்க வசதிகள் செய்து கொடுத்து விட்டுத் தான் போய் எங்கோ சமயல் அறை மூலையில் படுத்துறங்குவாள். அதுபோல் அனைத்துலகத்தினையும் ஈன்ற அன்னை சிறு சிறு இடங்களில் சென்று உறைவதாகக் கூறுகிறார். நான் முகனின் சிறிய முகத்தில் – அதனினும் சிறிய நாவில் கலைமகளாய் வீற்றிருக்கிறாள். திருமாலின் மார்பு என்றால்! அங்கு ஏற்கனவே இடத்தைப் பிடித்திருக்கும் துழாய்மாலை! அத்துடன் அணிந்திருக்கும் " கவுத்துவம் " என்னும் மணி! அம்மணியும் சிறியதல்ல! பருமணி! அங்குத்தானும் போய் ஒண்டிக்கொள்ளுகிறாள்! மலரோ! மிகச்சிறியது. அதனுள் ஏற்கனவே பல வண்டுகள்!

ஞாயிறு! கேட்கவே வேண்டாம் கடும் வெப்பம்!

திங்கள்! அது மிகக்குளிர்ந்தது! வளர்ந்தும் தேய்ந்தும் திகழும் நிலையற்ற தன்மையினை யுடையது. இங்கெல்லாம் அடியவர்களுக்காகத் தான் விரும்பிப் போய் உறைகிறாள்.

(3) அம்பிகையே கலைமகளும் திருமகளும் ஆதலை வீரை கவிராஜ பண்டிதரின் தமிழ் சௌந்தரிய லகரி கீழ்க்கண்ட பாடலில் குறிப்பிடுகிறது.

" வேதியர்கள் அயன்நாவில் விஞ்சைமகள் என்றும்
சீதரன்தன்மணி மார்பில் செழுங்கமலை என்றும்
நாதர்இடத்து அரிவை என்றும் நாட்டுவர்; எண் அடங்கா
ஆதிபரன் மூலபரை, யாமளை உன்மயக்கால் "

(4) அவ்வாறே அம்பிகை அநுபூதியும் குறிப்பிடுகிறது.

" கலைமா தவளே! கமலை அவளே!
மலைமா தவளே! மடவார் அனைவர்
தலைமா தவளே! தலைசேர் சடையில்
அலைமா தவளே! அறிவார் சிலரே "

## இரண்டாம்பகுதி

### அ. சரணம் புகும் அடியாருக்கு வந்தே வானுலகம் தந்தே

(1) தன்னைச்சரண் என்று புகுந்து, யோகமுறையில் வழி படும் அடியவருக்கு வானுலக இன்பத்தைத் தருகிறாள்.

(2) சகஸ்ரகமலத்தில் வந்து எழுந்தருளலை இங்கு 'வந்தே' என்ற சொல் குறிக்கிறது. அங்கு வந்து எழுந்தருளி தனது திரு வடித்தாமரையினின்று பெருகும் அமுதரஸத்தால் யோகிகளைச் சிரஞ்சீவி யாக்குகிறாள். அந்த உலப்பிலா ஆனந்தமாய தேனுகர்வால்யோகிகள் இவ்வுலகில்வானுலகஇன்பத்தைநுகரும் " ஜீவன் முத்தர்கள் " என அழைக்கப் படுகின்றனர். யோகிகளை " ஜீவன் முத்தர்கள் ஆக்குதலையே ' வானுலகம் தந்தே ' என்ற சொற்றொடரால் குறித்தார்.

### ஆ. பரிவோடு தான்போய் இருக்கும்

(1) அன்போடு அவ்யோகிகளின் ஆதாரக் கமலங்களில் குண்டலினி சக்தியாகித் தான் கீழ்க்கண்டவாறு போய் எழுந் தருளி யிருப்பாள்.

உறங்கும் குண்டலினி சக்தியே இங்கு ' இருக்கும் ' என்று அஃறிணை போன்று குறிப்பிடப் படுகிறது.

### இ. சதுர் முகமும்

(1) நான்கு முகங்களுள்ள பிரமனின் இடம் என்று குறிப் பிடப்படும் மூலாதாரத்திலும் எழுந்தருளுவாள். மூலாதாரம் பிருதிவிஸ்தானம். அங்கிருக்கும் சிவாத்மகமான பொருளுக்கு பிரம்மா என்று பெயர். என்பார் உரையாசிரியர் திரு. சண்முக நாதன் அவர்கள்.

(2) நான்கு இதழ்களே இங்கு ' சதுர்முகம் ' எனக்குறிப் பிடப்பட்டிருக்கிறது. ஏனெனில், மூலாதாரக் கமலம் நான்கு இதழ்கள் கொண்ட தாமரைவடிவில் அமைந்ததாகும். ஐந்து திசைகளில் சுடர்விடும் அமைப்புடன் கூடிய குத்துவிளக்கினை ஐந்துமுக விளக்கு என்றும் ஐந்து வகையான ஒலிஎழுப்பும் பகுதிகள் உள்ள இசைக் கருவியினை ' பஞ்சமுக வாத்யம் "

என்றும் கூறுகிறோம். இங்கு முகம் என்பது அவற்றின் பகுதிகளைக் குறிப்பதுபோல் சதுர்முகம் என்பதும் மூலாதாரத்தின் நான்கு இதழ்களையே குறித்து நின்றது என்பது தெளிவு.

(3) அல்லது 'பிரம்மக்ரந்தி' என்னும் முடிச்சில் எழுந்தருளி அதனைப் பேதித்து குண்டலினிசக்தி மேலெழும்புதலையே குறித்தார் எனினும் பொருந்தும்.

## ஈ. பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும்

(1) சுவாதிஷ்டானம் அப்புஸ்தானம் என்றும் அதுவே விஷ்ணுவின் இருப்பிடம் என்றும் ஒரு சாரார் கருதுகின்றனர்.

" அநேக விதமான மணிகளால் அந்தப் பிரதேசத்தையே பூர்த்திசெய்து வைக்கிறபடியால் அந்தச் சக்கரத்துக்கு மணி பூரகச் சக்கரமென்று பிரசித்தி ஏற்பட்டு விட்டது" இவ்வாறு விளக்குவார் தேதியூர் பிரும்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள். அதாவது மணிபூரகமென்பது அம்பிகை குண்டலினி ரூபத்தில் அநேக மணிகளுடன் எழுந்தருளும் இடம். மணிகள் பல ஒன்றாக இணைந்து மாலைபோன்று தோன்றுமிடம். ஆகவே அவ்விடத்தைப் "பைந்தேன் அலங்கல் பருமணி ஆகம்" என்றார்.

## உ, பாகமும்

(1) சிவபெருமானது பாகமாகிய மணிபூரகம் அல்லது சுவாதிஷ்டானத்திலும் எழுந்தருளுகிறாள். (மணிபூரகமே சிவஸ்தானம் எனவும் சுவாதிஷ்டானமே சிவஸ்தானம் எனவும் இரு வேறு கருத்துக்கள் உண்டு). அஃது எப்படியாயினும் குண்டலினியாக, சிவஸ்தானமாகிய பாகத்திலும் எழுந்தருளுகிறாள்.

(2) 'பாகம்' என்ற சொல் இடப்பாகம் என்ற பொருளுடன் 'உரியபகுதி' என்ற பொருளையும்தரும். ஆலய கோபுரங்களின் பக்கங்களை சிவபாகம் எனவும், விஷ்ணுபாகம் எனவும் குறிப்பிடுவதிலிருந்து இதனை அறியலாம்.

(3) எனவே 'பாகம்' என்றது சிவபெருமானுக்குரிய பாகம் எனவும் குண்டலினிசக்தி எழும்பிவரும் ஏனையபாகங்களாகிய 'அநாஹதம்', 'விசுத்தி', 'ஆஞ்ஞை' ஆகிய பாகங்களையும் குறிக்கும். அல்லது பிருதிவி பாகமாகிய மூலாதாரம், வாயுபாகமாகிய அநாஹதம், ஆகாசபாகமாகிய விசுத்தி என்றெல்லாம் விரித்துப் பொருள்கொள்ளலாம்.

## ஊ. பொற் செந்தேன் மலரும்

(1) பொன்போலும் மேன்மைமிக்க தேன்மலராகிய சகஸ்ர கமலத்திலும் எழுந்தருளுவாள்.

(2) மூலாதாரம் முதல் பல பாகங்களைக் கடந்துவந்த குண்டலினி சக்தி, சகஸ்ரகமலத்தில் யோகிக்குக் காட்சியளித்துத் திருவடிக்கமலத்திலிருந்து அமுதரஸம் கொட்டச்செய்து அவ் யோகியை மேற்கூறியவாறு ஜீவன் முக்தன் ஆக்குகிறது.

சகஸ்ரகமலத்தில் பெருகும் அமுதரஸமே செந்தேன். அது பெருகும் சகஸ்ரகமலமும் பொற்செந்தேன் மலர். உயர்ந்த மொழியினைப் 'பொன்மொழி' என்பதுபோல் உயர்ந்தமலராகிய' சகஸ்ரகமலத்தை அவ்வுயர்வுகருதி "பொற்செந்தேன்மலர்" என்றார்.

## எ. அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே

(1) அவ்வாறு மூலாதாரம் தொடங்கி; மேலெழும்பும் வழியில் சூரியகண்டமென்னும் பகுதியையும் சந்திரகண்டமென்னும் பகுதியையும் தனது இருப்பிடமாகக்கொள்கிறாள்.

(2) ஆறு ஆதாரங்களில், முதல் இரண்டும் அக்னிகண்டம் எனவும், அடுத்த இரண்டும் சூரியகண்டம் எனவும் அவற்றினுக்கு அடுத்தஇரண்டும் சந்திரகண்டம் எனவும் பெயர்பெறும்.

(3) அக்னி கண்டத்திலுள்ள இரண்டு ஆதாரங்களை 'சதுர்முகம், பருமணி ஆகம்' எனக் குறிப்பிட்டுவிட்டபடியால் அதனையொழித்து சூரியசோம கண்டங்களை "அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே" என்றார்.

இவ்வாறு இப்பாடலில் குண்டலினி யோகத்தின் சில கருத்துக்கள் குறிப்பாக உணர்த்தப்பட்டது திருமந்திரம், சௌந்தரியலகரி. Sir John Woodroffe எழுதிய Serpentine Power ஆகிய நூல்களில் விரிவாகக்காணலாம்.

யோகியர் ஜீவன்முக்தி எய்துதலும், ஏனையோர் வசதிகள் மிகுந்த இருப்பிடங்கள் (வீடு முதலியன) எய்துதலும் இப்பாடலின் பாராயண பலன் ஆகும்.

# நாவலர் நாட்டார் ஐயாவின்

## நல்ல பெருவிளக்கம்

'சித்தாந்தப் புலவர்மணி'

திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

( மலர் 42. இதழ் 2, பக்கம் 82 இன் தொடர்ச்சி )

**1. குரவம்பாவை :**

"குரவம் (குரா) என்னும் மரத்தின் காய், ஒரு சிறு பொம்மை (பாவை) போலக் காய்த்துத் தொங்கும். ஆதலின் குரவமரத்தின் காயினைக் "குரவம் பாவை" என்று வழங்குவர். பாவை என்றால், பெண் என்றும் ஒரு பொருள் உண்டு. ஆதலால், குரவமரத்தின் பாவையாகிய பெண்ணை, அடுத்துள்ள கோங்கமரம் திருமணம் செய்துகொள்ள விரும்புகின்றதாம். அழகிய பெண்ணை மணக்க யார்தான் விரும்பி முன்வர மாட்டார்கள்? ஆனால் அழகிய பெண்ணை எளிதில் அடைந்து மணந்துவிட முடியுமா? அப்பெண்ணின் தாய் தந்தையர்க்கு உரிய அளவு, முறைப்படி பொருள் கொடுத்த பின் அன்றோ, அழகிய அப்பெண்ணை அடைந்து மணத்தல் இயலும்?''.

**2. கோங்கம்பொன் :**

"கோங்கமரத்தின் பூக்கள் பொன்னிறம் வாய்ந்து பொலிவுற்றுத் திகழும். ஆகவே அப்பூக்களைப் பொன் என்று புலவர்கள் புகழ்ந்து கூறுவதுண்டு. ஆதலால், கோங்கமரம் தன் பூக்களாகிய பொன்னைக் குரவமரத்திற்கு ஏராளமாகக் கொடுத்து, அதனது பாவையைத் தனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டிற்று. பொன் கொடுத்தால், யார்தான் நன்று என்று இசைய மாட்டார்கள்? ஏராளமான கோங்கம் பூக்களாகிய பொன்னைப் பெற்ற குரவமரம், தன் பாவையாகிய பெண்ணைக் கோங்கமரத்திற்க் கொடுக்க இசைந்தது;''.

**3. பாடலம் பூந்தழல் :**

"திருமணத்தை அங்கியங் கடவுள் சான்றாக (அக்கினி சாட்சியாக) அன்றோ, செய்து கொள்ளுதல் வேண்டும்? நெருப்

புக்கு எங்கே போவது? எங்கும் செல்லவேண்டுவதில்லை. அந்தப் பாலைவனத்திலேயே, பாடலம் (பாதிரி) எனும் மரங்கள் உள்ளன. அவற்றின் மலர்கள் சிவந்தநிறம் பெற்று நெருப்புப் போலத் திகழும். எனவே பாதிரி மரங்களின் மலர்க்குவியல் ஆகிய நெருப்பின் முன்னர், கோங்கமரம் குரவம்பாவையை மணந்துகொள்ளுகின்றது''.

## 4. வண்டுகள் பாடல் :

"திருமண வேளையில் வேத மந்திரங்கள் ஓதப்பெறுதல் வேண்டும்; சுற்றமும் நட்பும் சூழ்ந்திருந்து வாழ்த்துதல் வேண்டும். இத்திருமணத்தில் அது நிகழ்ந்ததா? எனின், ஆம் நிகழ்ந்தது. எவ்வாறு நிகழ்ந்தது? பாலைநிலத்தில் மரவம் (மரா) என்னும் மரங்கள் உண்டு. அவற்றை வெண்கடம்பு என்றும் கூறுவர். அம்மரத்தின் மலர்கள் அழகும் மணமும் அமைந்து. தேன் நிறைந்து திகழும். அத்தேனை உண்ண வண்டுகள் இடையறாது மொய்த்துக்கொண்டிருக்கும். தேனை உண்ணும் அவ்வண்டின் கூட்டங்கள், மென்மையாகவும் இனிமையாகவும் ரீங்கார ஓசையை மிழற்றும். அவ்வினிய ஓசை, வேத இசைபோலவும் சான்றோர்களின் ஆசி போலவும் அமைகின்றது''.

## 5. வெண்பொரி தூவுதல் :

"திருமண நிகழ்ச்சியில் மணமகன், மணமகளுக்கு மங்கல நாண் அணிவிக்கும் போதும், அதற்குச் சிறிது பின்னரும் மணமக்களை வாழ்த்தி வந்திருந்தோர் அனைவரும் வெண்பொரி தூவுவர். 'புன்கு மலர்ப்பொரி அட்ட மணம்செய்யும் மிழலையாமே' என்பது சம்பந்தர் தேவாரம். அம்முறையில் பாலை நிலத்தில் இருக்கின்ற முருங்கைமரங்கள், வெண்ணிறம் வாய்ந்த தமது மலர்களைச் சொரியும் காட்சி, மணமக்களை உற்றார் உறவினர் வெண்பொரிதூவி வாழ்த்துவது போல விளங்கியது. இந்நிகழ்ச்சியும், காட்சியும் எத்துணைச் சிறப்பமைந்து, மிகவும் வியக்கத்தக்கனவாக விளங்குகின்றன! இவ்வழகிய இனிய காட்சியையே, நமது சொற்பொழிவாளர் குறிப்பிட்ட பாடலில் சுவாமிகள் பாடியருளியிருக்கின்றார்.

" குரா அளித்திடு பாவையைக் கோங்குபொன் கொடுத்துப்,
பராரைப் பாடலம் பூந்தழற் பாங்கரின் மணப்ப,
மராமரத்து உளர்வண்டு பண்பாட, வன்முருங்கை
விராவி வெண்பொரி இறைத்திடும்; வியப்பினது ஒருபால்!"

## அடைமொழிப் பிழை :

"இவ்வழகிய இனிய அரும்பெறற் பாடலில், முருங்கைமரம் 'வன்முருங்கை' என்று குறிப்பிடப்பெற்றிருக்கின்றது. முருங்கை மரம் மிகவும் மென்மை வாய்ந்தமரம். அதனை 'வன்முருங்கை' என்று குறிப்பிட்டது பொருத்தமன்று. இப்பாடலைப் பாடிய கவிஞர், இயற்கைப் பொருள்களை உண்மையிலேயே உற்று நோக்கி நுனித்து உணராமல் இருந்ததனுல்தான், இத்தகைய அடைமொழியை வழங்கினராதல் வேண்டும். இதனுல் பிற்காலப் புலவர்களின் குறையும் பிழையும் தெற்றென விளங்குகின்றன. என்று நம் சொற்பொழிவாளர் சுட்டினுர். சொற்பொழிவாளர் சுட்டிய குறைபாடும் பிழைபாடும், ஏதோ ஒரோயொருகால் யாரோ பிற சில பிற்காலப் புலவர்களுக்குப் பொருத்தக் கூடுமாயினும், உண்மையிலேயே சிறந்த சிவானுபூதிச் செல்வராகிய சிவஞானசுவாமிகள்பால், இத்தகைய குற்றமும் குறைபாடுமுண்டு என்றுகருத, யான் சிறிதும் துணிகிலேன்.

## வண்முருங்கை :

முருங்கைமரத்தின் பட்டை - இலை - சாறு - பூ - காய் - விதை முதலியன அனைத்துமே, மக்களின் அன்ருட வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படும் வளப்பம்(வண்மை) உடையன. முருங்கைமரம் மருத்துவ நலங்கள் செறிந்த ஒரு சிறந்த மூலிகை மரம். ஏழைகளின் கற்பகமரம். அச்சிறப்பியல்புகள் கருதி, ஆசிரியர் சிவஞானசுவாமிகள "வண் முருங்கை" என்றே பாடியிருந்திருப்பர். ஆனுல் நூலை அச்சிட்டவர்களின் கவனக்குறைவால், அது "வன்முருங்கை" என்று, நமது சொற்பொழிவாளர் குறிப்பிட்டதுபோல, எல்லாப் பதிப்புக்களிலும் பிழையாக அமைந்துவிட்டது இப்பிழையும் குறையும் அச்சிற்பதிப்பிட்டவர்களைச் சாருமேயன்றி, நமது மாதவச் சிவஞான சுவாமிகளை, ஒரு சிறிதும் சாராது என்று உறுதியாகக் கருதுகின்றேன்.

புலவர்வகுப்பு மாணவர்களாகிய நீங்கள் சங்ககாலத் தமிழ் இலக்கியங்களையும், காஞ்சிப்புராணம் போன்ற கலைநலஞ் சான்ற அரும்பெரும் தமிழ்இலக்கியங்களையும் எல்லாம் நன்ருக அழுந்திக் கற்றுத்தேர்ந்து, மிகவும் சிறந்த நிறைந்த செந்தமிழ்ப் புலமை பெறுதல் வேண்டும் என்று விரும்பி, இறையருளை வேண்டி வாழ்த்தி, நமது சிறப்புச்சொற்பொழிவாளர் அவர்களை மனமாரப்பெரிதும் போற்றிப் பாராட்டி அமைகின்றேன்" என்று கூறி, நாட்டார் ஐயா அவர்கள், தம்முடைய தலைமையுரையை நிறைவுசெய்தருளினுர்கள்.

**வெண்பாக்கள் :**

திரு. நாட்டார் ஐயா அவர்கள் வழங்கிய தலைமை நிறைவுரை, என் உள்ளத்தில் மிக்க மகிழ்ச்சியையும், உணர்வு எழுச்சியையும் விளைவித்தன. அதனால், அப்போது பின்வரும் வெண்பாக்களை யாத்து அகம்மிக மகிழ்ந்தேன்.

ஆய கலையனைத்தும் ஆய்ந்துணர்ந்து கற்றவல்ல,
தூய சிவஞான சுவாமிகள்தாம், — நேயமிகக்
காஞ்சிப் புராணம் கவின்பெருகச் செய்தளித்தார்,
தீஞ்சுவைகள் எல்லாம் செறிந்து. (1)

தலச்சிறப்பைச் சாற்றும் புராணங்கள் தம்முள்,
கலைச்சிறப்பார் காஞ்சிப் புராணம், — நலச்சிறப்புப்
பற்பலவும் வாய்ந்து, பயில்வார்க்கு அறிவூற்றும்;
பொற்புமிக ஓங்கிப் பொலிந்து. (2)

தொட்ட இடம்தோறும் தூயசைவ சித்தாந்த
நுட்பங்கள் தோற்றி,உயர் நோக்கமைந்து, — மட்டில்லா
இன்பம் விளக்கும்; இறையுணர்வில் தோய்விக்கும்;
நன்றுயர்காஞ் சிப்புரா ணம். (3)

— ந. ரா. மு

கரந்தைப் புலவர் கல்லூரியின் மாணவனாக, யான் பயின்று கொண்டிருந்தபோது, 'இளங்கோவடிகள் இலக்கியமன்றத்தில் இந்தவிழா நிகழ்ச்சி நடைபெற்றது. அது 1943 ஆம் ஆண்டு என்று நினைக்கின்றேன். ஏறத்தாழ 30 ஆண்டுகள் கழிந்து விட்டனவாயினும், இவ்வரிய உரைகளும், இனிய நிகழ்ச்சிகளும் சிதைந்து அழிந்துபடாமல், மறக்க இயலாதபடி என்னுடைய உள்ளத்திற் பசுமை நிறைந்து பதிந்திருக்கின்றன' நாவலர் நாட்டார் ஐயா அவர்கள் அளித்த இந்த நல்ல பெரு விளக்கம், இன்றளவும் எல்லையில்லாத இன்ப உணர்வினை எண்ணுந்தொறும் எனக்கு வழங்கிக்கொண்டிருக்கிறது.

அத்தகைய பெருவித்தகராகிய நாவலர் நாட்டார் ஐயா அவர்கள் போன்ற தமிழ்ப்பெரும்புலவர் ஒருவரை, இனி நம் சைவத்தமிழுலகம் என்றேனும் மீண்டும் பெறக்கூடுமா? என்று, எண்ணி என் உள்ளம் ஏங்கிக்கலங்குகின்றது. ஐயா அவர்கள் மறைந்தபொழுது (23—3—44) இருபதுக்கு மேற்பட்ட இரங்கற் பாடல்கள் எழுதியிருந்தேன். கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடாகிய "தமிழ்ப்பொழில்" என்னும் இதழில், இடமின்மை கருதி அவற்றுள் ஆறு பாடல்களை மட்டும் எடுத்து வெளியிட்டிருந்தனர். அவைகளுள் பின்வரும் பாடலும் ஒன்று.

"தீஞ்சுவைகள் மிகச்சொட்டச் சிவஞான
மாதவன்செய், சிறந்தநூலாம்
காஞ்சிப்பு ராணத்தின் கவிகள்பல
வற்றினுக்குக், கனிவுமிக்க
வாஞ்சிப்பாற் சைவநலம் வளங்கொழிக்கும்
பொருள்விரித்தாய்; மகிழ்ந்துகேட்டே
யாஞ்சுவைத்தேம்; அதுநினைத்தால், யாவர்இனி
உரைப்பர்?என்றே, அழுங்குகின்றேன்!"

— ந. ரா. முருகவேள்

## இலக்கணத்திற் கற்பனைகள் :

தாம்பரம் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில், தமிழ்த்துறையில் யான் பணியாற்றிக் கொண்டிருந்தபோது (1957 — 1962), பி ஏ., பி.எஸ்சி., மாணவர்களுக்கு இலக்கணபாடம் கற்பிக்கும் பேறு, எனக்குக் கிடைத்தது. அதன் பயனாக "இலக்கணத்திற் கற்பனைகள்" என்னும் ஓர் அரிய ஆய்வுநூலை, 1961 ம் ஆண்டில் வெளியிட்டேன். அதனை நமது நாவலா நாட்டார் ஐயா அவர்களின் திருவடிகளுக்கே உரிமையாக்கிப், பின்வரும் பாடலை இயற்றிச்சேர்த்துப் பணிந்து மகிழ்ந்தேன்.

"இலக்கணத்திற் கற்பனைகள் என்னும்இந்தச்
சிறுநூலை, எந்தை போல்வார்,
சிலப்பதிகா ரம்முதலாம் செந்தமிழ்நூற்கு
உரைவகுத்த சிறப்பின் மிக்கார்,
நலத்தகைய பெரும்புலவர் நாவலர்வேங்
கடசாமி நாட்டார் தாம்,எற்கு
உலப்பில்தமிழ்ச் சைவநலம் உதவுதிறம்
நினைந்து,அவர்தாட்கு உரிமை செய்கேன்."

## முடிவுரை :

"மறைமலை யடிகள், நாவலர் நாட்டார்,
வண்புகழ்ப் பண்டித மணியார்
துறைகலை போய சுப்பிர மணியத்
தோன்றலார், ஞானியார் அடிகள்
முறைதிகழ் அறிஞர் சச்சிதா னந்தர்,
முதறி ஞர்திரு. வி.க.,
பிறபிற பெரியோர் புலமையும் தொண்டும்
பெரிதுணர்ந்து அவர்அடி பணிவாம்"

— ந. ரா. முருகவேள்

15—12—82.

# தொண்டரிணக்கம்

"சிவபாதசேகரன்" (திரு. V. சேகர்)

செயலர், திருவாதிரையான் திருவருட்சபை, சென்னை.

"உன்னை நினைந்தே கழியும் என் ஆவி" என்றி, தளராத உறுதி பூண்டவர் அப்பர்பெருமான். மனத்தகத்தே இமைப் பொழுதும் நீங்காது, அடியவரைக் காக்கும் பெற்றியுடைய தலைவனைத் தனது ஆவியே தழுவுவதாகக் கூறி, அப்பெருமானை ஞானத் தளையிட்டு வைப்பார் நாவரசர்.

திருச்சிற்றம்பலம்

ஏயி லானை யெனிச்சை யகம்படிக்
கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மனியைப் பெற்ற
தாயி லானைத் தழுவுமென் ஆவியே.

என்ற இவ்வினிய பாடல், உடம்பெனும் மனையகத்தே உள்ளம் தகளியாக, உணர்வு நெய்யாக, உயிர் திரியாக, ஞானத்தீ வளர்த்துக் கங்கையாளனைக் கண்ட அடிகளின் அனுபவத்தை உரைப்பதாக அமைவது.

மனமானது பலவகைப்பட்ட எண்ணங்களைத் தன்னகத்தே கொண்டது. தன்னை நினையவைப்பதும் மறப்பித்து மறைப்பிப் பதும் இறைவனது செயல்களாவதை,

"நின்னைஎப் போதும் நினையலொட்டாய் நீ நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி"

என்பதால் அறியலாம். எனவே, இறைவனைப்பற்றிய எண்ணத் தைத்தர இறைவனைவேண்டுவது இயற்கை. அப்பர்பெருமானே அதோடு கூட, மனமாகிய சரக்கறையில் தொண்டர்களின் அடிப்பொடி நீறும் துளங்கவேண்டும் என்று விண்ணப்பிக் கின்றார்.

விண்வார் புரமூன்றுமெய்தாய் என்விண்ணப்பம் மேலிலங்கு
தொண்டாடிய தொண்டரடிப் பொடிநீறுந் தொழுதுபாதம்
கண்டார்கள் கண்டிருக்குங் கயிலாயமுங் காமர்கொன்றைத்
தண்தார் இருக்குஞ் சரக்கறையோஎன் தனிநெஞ்சமே.

தொண்டர்களை நாடவேண்டுவதன் இன்றியமையாமையை நாவுக்கரசர் தனது பாடல்களில் குறிப்பிடுகின்ருர். உண்மையான அடியவர்கள் புலனைந்தையும் வெல்பவர்கள். ஓடும் செம்பொன்னும் ஒக்கநோக்குபவர்கள். சித்தத்துட் சிவனைக் காண்பவர்கள். சிறு தெய்வம் சென்று சேராதவர்கள். மாதேவனுக்கே மீளா அடிமை பூண்டவர்கள். கலைஞானம் திருவருளால் கைவரப்பெற்றவர்கள். புன்னெறிகளைக் களைந்தமையின் செந்நெறிக்கே அணித்தானவர்கள். நகமெல்லாம் தேய நாண்மலர் பறித்திட்டு, கண்ணீர்வாரத் தொழுதும், போற்றியும், ஆடியும், பாடியும், அனைத்துயிர்க்கும் வீடுபேருய் நிற்கும் சங்கரனின்தாட்டாமரைகளுக்கு அன்புபூண்டொழுகுபவர்கள். இத்தகைய தொண்டர்களைச் சார்வதால் அவரவர்களது இறையனுபவங்கள் அறியப்பெறுவதாகிய கிடைத்தற்கரிய பேறுகிட்டுகிறது. எனவேதான் திருவாரூர்த் திருவாதிரைப் பெருமையை அப்பர்வாயிலாகக் கேட்பதில் பேருவகை காண்கின்ருர் ஞானசம்பந்தர். இது போன்றே, திருச்சுழியலில் தங்கியிருந்த நம்பியாரூரரின் கனவில் இறைவன் தோன்றி அவரைத் திருக்கானப்பேருக்கு அழைத்தவுடன், அத்தலத்திற்கு விரைந்து சென்று, பெருமானின் திருவுருவ அழகினைக் கண்குளிரத் தொழும் வேட்கை பெரிதுமுடைவராகி, நம்பிகள் திருப்பதிகம் பாடுகையில் ''தொண்டர் அடித்தொழலும்'' என்று துவங்குகிருர். கானப்பேரில் அடியார்கள் அமலனைத் தொழும் காட்சியைக் கண்ணாரக் காண்பதற்கு ஏங்குகிருர் சுந்தரர். திருத்தலங்கள் தோறும் திருப்பதிகம் பாடுகையில் அத்தலத்தில் அடியார்கள் வழிபடுதலைக் காழிப்பிள்ளையாரும் பாடிப்பரவுவார்.

தெரிந்த அடியார் சிவனே யென்று திசைதோறும்
குருந்த மலருங் குரவின் அலருங் கொண்டேந்தி
இருந்து நின்றும் இரவும் பகலும் ஏத்துஞ்சீர்
முரிந்து மேகந் தவழுஞ் சோலை முதுகுன்றே.

என்பதால் பிறைநுதலோனைப் பெரியோர் பேணும் காட்சியைக் காணமுடிகிறது. வீணையும் யாழும் இசைத்து, இருக்கும் தோத்திரமும் நவின்றேத்திக்கரவின்றி நன்மாமலர்கொண்டு வணங்கி நெக்குநெக்குருகித் தலையாரக் கும்பிட்டுத் தெருவு தோறும்

அலறி அழுத கண்ணிணைகளையும் தொழுத கைகளையுமுடைய அடியார் பெருமையை மணிவாசகரும் விதந்து போற்றுவார். இவ்வாடலையும் பாடலையும் பெருமான் விரும்பி ஏற்பதை, "தன் பழந்தொண்டர்கள் குதியுங்கொள்வார்" எனப் பாடுகிறுர் பாலருவாயர். இத்தகு அடியார்களைச் சார்வதால் செந்நெறி சமீபிக்கிறது, மனமும் சிவமதே நினையும் நிலையைப்பெற்றுவிடு கிறது. இவ்வுயரிய நிலையைவேண்டும் தாண்டக வேந்தர், தன்னைப் புலனைந்தையும் வெல்லாதவனென்றும், தொடருடன் இணங்காதவனுகவும், தாழ்த்திக்கூறி, செந்நெறிக்குச் சேயோன் ஆகிவிட்டதாகப் பாடுகின்றுர்.

வென்றிலேன் புலன்களைந்தும் வென்றவர் வளாகந்தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே செந்நெறி அதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்புகின்றேன் நீசனேன் ஈசனேயோ
இன்றுளேன் நாளை இல்லேன் என் செய்வான் தோன்றினேனே.

இணங்கத்தன் அடியார் கூட்டத்தையே அமைத்துத்தந்த இறைவனிடம் நாம் அவ்விணக்கத்தை வேண்டற்பாலதை வலியுறுத்துகிறுர் ஆமுரடிகள், "உன்பழ அடியார் கூட்டம் அடியேன்காண ஆசைப்பட்டேன்" என வாதவூரடிகள் விழை வதால், தொண்டரிணக்கமும் ஆண்டவனிடம் வேண்டத் தக்கதாக அமைகின்றது.



---

## அப்பர் அருள் வாக்கு

பத்தர்கள் சித்தத்தில் இணங்குபவன்.

பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை, மாணிக் கத்தின்
தொத்தினைத், தூநெறியாய் நின்றுன் தன்னைச்
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும்
அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந்தெனே.

# நாக்கும் வாக்கும்!


## திரு. அரங்க. முத்துமணி

மாவட்டப் பதிவாளர் ( தணிக்கை ), தஞ்சாவூர் – 1.


" பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினுல் " நாவுக்கரசர் என்ற நல்ல திருநாமம்; நம்பர் திருவருளால் நயமுறப்பெற்ற வாகீசர் வாக்கிலிருந்து வந்த அருள் மிகுந்த சொற்ருெடர்கள் ஏராளம். அவற்றில், மாந்தரது தினப்படிக்கடமையை நன்கு நினைவூட்டித், தொண்டு செய்யத் தூண்டுவது, "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதுவாம்.

இற்றை நாளில், வேலை கிடைக்கவில்லை யென்று, வெட்டிக் கதைபேசிப் பொழுது போக்குவாரைப் பார்க்கிருேம். வீண் பொழுது போக்குவது நாவுக்கரசருக்குப் பிடிக்காத வொன்று.

எனவேதான், இன்னம்பர் என்ற தலத்தில்,

"பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழக்கணக் கின்னம்பர் ஈசனே"

என்று திருவாய்மலர்ந்திடக் காண்கின்ருேம்.

இறைபணி செய்வதற்கு, மனுப்போட்டு, பின்னர் ஆணை பெற்றுசெய்யவேண்டுவதின்று, மனத்தால் நினைத்து, வாக்கினுற் பேசிக், கிடைத்தமலர்களை ஆண்டவன் திருவடியிற் சேர்த்தலே, 'வழிபாடு' என்பதும் நாவுக்கரசர்காட்டும் நல்ல கொள்கையாம்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை
சூழ்த்த மாமலர்த் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே"

என வருஉம் திருவாக்கானும் தூலசரீரத்தின் தொண்டினைக் குறித்தலைக் காண்கிருேம்.

எனவே உலகத்தவர்க்கு எடுத்துக்காட்டாகக் கையினில் உழவாரம் ஏந்தித் திருத்தொண்டுசெய்த பெற்றியினை, முற்றுங் கண்ட தெய்வச்சேக்கிழார் அடியார் " திருக்கூட்டச் சிறப்பி" லேயே நாவுக்கரசர் பெருமானைப் பல்வேறு தொடர்களால்

பரக்கக்கூறி பாராட்டியிருத்தலைப்பார்க்கலாம்! காட்டாக, " என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பரின் அருள்வாக்கு தெய்வச்சேக்கிழாரின், சிந்தையிலே செவ்விதின் நின்றதனாலே, அடியார் திருக்கூட்டச்சிறப்பில், " கைத்திருத்தொண்டுசெய் கடப்பாட்டினார்" என்றவாக்கு பிறந்தது என்றுகோடல் சால்பு உடைத்து.

மேலும், திருநின்ற சருக்கத்தில், திருநாவுக்கரசு சுவாமிகள் புராணத்தில், எந்த அடியாருக்கும், குறிப்பிடாத அளவில், எடுத்தஎடுப்பிலேயே, "திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி வாழ..." என்று தொடங்குதலான், நாவுக்கரசரின் நல்ல திருத்தொண்டு, சேக்கிழாரின் உள்ளத்தில் எவ்வளவு ஆழமாகத் தூய்மையாகப் பதிந்துள்ளது என்பதனைக் காணுகின்றோம்.

"சொன்னமத் தமிழ்புனைந்து தொண்டுசெய்வான் தொடர்ந் தெழுவார்" என்று நாவுக்கரயரை நம்முன் காட்டும் தெய்வச் சேக்கிழார், கடைசிவரையிலே, அப்பர்பெருமானை, அப்படியே காட்டும் அழகு, நனிமிக வியந்து. புகழ்ந்து பாராட்டற்பாலது

கடைசிநாட்களில், பொய்கைசூழ் பூம்புகலூரில் வாழ்ந்த காலத்திலும்,

"............புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப், பரிவினொடும் நாடோறும் திருமுன்றில்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங்காதலுடன்"

எனவரூஉம் பெரியபுராணத்தானே, உழவாரத் தொண்டு செய்துவந்தார்கள் என்பதும் வெள்ளிடைமலை.

உம்பர்பிரான் திருமுன்றில், செம்பொன்னும், நவமணியும் சேர்ந்து தோன்றியகாலத்திலும், அரம்பையர் ஆடிய நேரத் திலும், அப்பரின் அருள் உள்ளம், செப்பரிய ஈசன் திருவடி யிலும், ஒப்பற்ற உழவாரத் திருப்பணியிலும் ஈடுபட்டிருந்த தன்மையினைக் காண்கின்றோம்.

"அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தாம்
சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்!"

என்ற சேக்கிழார் திருவாக்கு, இன்றைய தலைமுறைக்கு, எவ் வளவு தேவை என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

"என்கடன் பணிசெய்து கிடப்பதே" — என்ற அப்பரின் அருள்நாக்கிலேமலர்ந்து தெவிகமணம்வீசும் தேவாரத்தொடர், சேக்கிழாரின் வாக்கிலே, தித்திக்கும் தேஞக, "திருத்தொண்டர் மாக்கதை" முழுதும் பெருக்கெடுத் தோடுவதனை சுவைத்து மகிழ்வோம்!



மதிப்புரை

## மொழிக்குமொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை

### மாலை – 12

வெளியிடுவோர்:- ஆங்கிரச. சு. வேங்கடேசசர்மா 5. டெலி போஸ்ட் காலனி, குறுக்குத்தெரு மேலமாம்பலம், சென்னை 33. பக்கங்கள் 84. விலை ரூ. 3—00.

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளான தேவாரத் திருப்பதிகங்களை, பொழிப்புரை, விசேடஉரை, பதிக வரலாறு, தலவரலாறு, புராணவரலாறு முதலிய உரைவிசேடங் களுடன் 108 தமிழ்மாலைகளாக்கிச் சிவபெருமானின் 108 திரு நாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நூலாகச்சமர்ப்பிக்கும் திட்டத்தோடு சிவபுராண ஞானபூஜகர் பிரமஸ்ரீ ஆங்கிரச வேங்கடேசசர்மா அவர்கள் இதுவரை 12 நூல்களைத் தன்முயற் சியால் வெளியிட்டுள்ளார். பக்தி உள்ளமும் பண்பாடும் சமய நூல்களில் அழுந்திய புலமையும் ஆர்வமும் உடைய இவரது நூல்கள் திருமுறைகளைக் கருத்துரைகளோடு பயிலப்பெரிதும் உதவும். வெளிவந்த 1 முதல் 12 தமிழ்மாலைகளைப்பெற விரும்பு வோர் ரூ 25—00 அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். ரூ 158—00 முன்பணமாக அனுப்புவோர்களுக்குஇதுவரை வெளிவந்துள்ள நூல்களை அனுப்புவதோடு இனிவெளியிட இருக்கும் நூல் களையும் அவ்வப்போது அனுப்பி வைப்பதாகத் தெரிவித் துள்ளார். இறைத்தொண்டும் சமயத்தொண்டும் செய்துவரும் அன்பரின் பணி சிறக்க சமய ஈடுபாடுடைய பெரியோர்கள் உதவலாம்.

— வி. சா. குருசாமி தேசிகர்.

# செய்திகள்

## மதுரையில் ஆயில்யத் திருநாள் ஆலயவழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் தைத்திங்கள் ஆலய வழிபாடு 29—1—83 அன்று பாண்டிநாட்டுத்தல வழிபாட்டுத் தொடக்கமாக மதுரை அருள்மிகு ஸ்ரீ மீனுட்சியம்மை உடனுய சொக்கநாதப் பெருமான் திருக்கோயிலில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் கூடிய இவ்வழிபாட்டின்போது தலத்திருப்பதிகங்கள் பாராயணம் செய்யப்பெற்றன. வழிபாட்டிற்கு வந்திருந்த அன்பர்கட்குத் " திரு ஆலவாய்த் திருப்பதிகங்கள் " என்னும் தலத்திருப்பதிக நூல் வழங்கப்பெற்றது. காலை 12 மணியளவில் சமய விரிவுரை நடைபெற்றது. மதுரைத் திருக்கோயில் கண்காணிப்பாளர் திரு. சுப்பராயன் வரவேற்புரை வழங்கினுர். ஸ்ரீமத். நெல்லையப்ப சுவாமிகள் ' தலபுராணமும் பிறவிப்பயனும் ' என்பது பற்றியும் பொற்கிழிக் கவிஞர் திரு. சொ. சொ. மீ. சுந்தரம் எம். காம்., ' தேவார விளக்கம் ' பற்றியும், மதுரை, வித்துவான் திரு. தா. குருசாமிதேசிகர் 'தலத்திருப்பதிக விளக்கம்' பற்றியும் விரிவுரை ஆற்றினர். திரு. சி. கல்யாணசுந்தரம் நன்றி கூறினுர். அன்பர் பலர் வழிபாட்டிற் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

ஒவ்வொரு ஆங்கில மாதத்திலும் முதல் ஞாயிற்றுக்கிழமை யன்று காலை சரியாகப் பத்துமணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நி தானம்அவர்களை அன்பர்கள் வழிபட்டு அருளுபதேசம்பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக் கூட்டம் தருமையில் நடைபெற்று வருகின்றது. இம்மாதம் 6—2—82 அன்று 21 ஆவது சிறப்பு வழிபாட்டுக் கூட்டம் நடைபெற்றது. முதலில் கூட்டுப்பிரார்த் தனை நிகழ்வுற்றது. அடுத்துத் தருமையாதீன வேத சிவாகம பாடசாலைத் தலைமையாசிரியர் திரு. சுவாமிநாத சிவாசாரியார் கும்பாபிஷேக தத்துவம் பற்றிப் பேசினுர். தொடர்ந்து தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாகப்பல அரிய கருத்துக்களை நன்கு விளக்கி

உபதேசித்தருளினர்கள். திருநீலகண்டர் புராணம் இம்மாதச் சிந்தனையாக அமைந்தது. நீலகண்டர் வரலாற்றை விரிவாக எடுத்து இயம்பி, ‘நிறையெனப்படுவது மறைபிறர் அறியாமை’ என்னும் கலித்தொகைத் தொடரினையும் “கற்பென்னும் திண்மை” என்னும் திருக்குறள் தொடரையும் மேற்கோள் காட்டி, இயைத்து, இலக்கிய இன்பம் ஊட்டி மகிழ்வித்தருளினர்கள். வேட்கோவராகிய (குயவராகிய) திருநீலகண்டர் அடியார்களுக்குத் திருவோடு அளிக்கும் தொண்டினை இடையருது செய்து அதன் காரணமாகவே இறையருள் பெற்றமையை எடுத்துக் காட்டித் “தாம்செய்யும் தொழில் எதுவானாலும் அத் தொழிலினாலேயே பிறருக்கு உபகாரம் செய்யலாம்” என்னும் நெறியினையும் “எந்தத் துறையில் நாம் ஈடுபடுகின்றோமோ அந்தத்துறை மூலமாகவே இறைவன் நமக்கு அருள்செய்வான்” என்னும் தத்துவத்தினையும் நெஞ்சில் பதியும் வண்ணம் உபதேசித்தார்கள். திருமயிலாடுதுறை நகரப் பெருமக்களும் மெய்யன்பர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

அடுத்த அருளுபதேசம் 6—3—83 அன்று நிகழ்வுற இருக்கின்றது. அன்பர்கள் கலந்துகொண்டு குருவழிபாடு ஆற்றி அருளுபதேசம் பெற்றுப் பயன் பெறுவார்களாகுக.

தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் மார்கழிமாதச் சிறப்பு வழிபாடு

மார்கழி மாதத்தை வழிபாட்டிற்குரிய மாதமாக நம் முன்னோர்கள் கொண்டுள்ளனர். அதனாலேயே முன்னோர்கள் சைவ-வைணவத் திருக்கோயில்களில் வைகறைப்போதில் திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டையும் சிவன் கோயில்களில் திருவாதிரைப் பெருவிழாவையும் திருமால் திருக்கோயில்களில் வைகுண்ட ஏகாதசிப் பெருவிழாவையும் ஏற்படுத்தி வழிபட்டு வருகின்றனர். மார்கழிமாதம் தேவர்களின் விடியற் காலம் என்றும் அவ்விடியற்காலை வேளையில் இறைவழிபாடு செய்து இறையருள் பெறவேண்டும். என்றும் கருதி இம்மாத வழிபாட்டை நம் முன்னோர்கள் மேற்கொண்டுள்ளனர். “மாதங்களுக்குள் மார்கழி மாதமாக இருக்கிறேன்” என்று பகவத்கீதையில் கிருஷ்ணபரமாத்மா கூறியிருக்கிருர் என்பது இம்மாதத்திற்கு மேலும் சிறப்புத்தருவதாகும். இம்மாதத்தில் இறைவழிபாட்டை மேற்கொள்வோர், இவ்வாண்டு முழுவதும் செய்யும் செயல்களெல்லாம் நன்மையாகவே முடியும் என்பது நம் முன்னோர்கள்

முடிவு. அம்முறையிலே நம் நாட்டில் திருப்பள்ளியெழுச்சி வழிபாடு எல்லாத் திருக்கோயில்களிலும் சிறப்பாக நிகழ்த்தப் பெறுகிறது.

தருமையாதீனத்திருக்கோயில்களிலும்மார்கழிமாதவழிபாடு சிறப்பாக நிகழ்த்தப்பெறுகிறது. தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்பெருமானுக்குத் திருப்பள்ளி யெழுச்சி வழிபாட்டை விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நாள்தோறும் சிறப்புற நிகழ்த்தியருளுகின்றார்கள்.

பின்னர் ஸ்ரீ ஞானபுரீசுவரர், ஸ்ரீ தருமபுரீசுவரர், ஸ்ரீ அஷ்டா தசபுஜ ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காம்பிகைத் திருக்கோயில்களில் வழிபாடு நிகழ்த்தி ஆதீனத் திருக்கோயில்களுக்கும் பிற திருக் கோயில்களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கி ஆசியருளுகிறார்கள். ஆங்காங்கும் உள்ள மக்கள் பலருக்கும் இறைவழிபாட்டு முறையை உணர்த் தவும், அவர்களை இறைவழிபாட்டில் ஈடுபடுத்திப் பயன்பெறச் செய்யவும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பல தலங் களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றியருளுகிறார்கள். மேலும் ஆதீனத் திருக்கோயில்களுக்கு எழுந்தருளும்போது ஆதீன உயர் அலுவலர்களையும் உடனழைத்துச்சென்று ஆதீனத் திருக்கோயில்களின் நிர்வாகத்தை மேற்பார்வையிடச்செய்து நெறிப்படுத்தியருள்வதும் குறிப்பிடத்தக்கது.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நாள்தோறும் எழுந்தருளி நிகழ்த்தும் இச்சிறப்பு வழிபாட்டின் போது உலக நலங்கருதி சுவாமிக்கும், அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் அருச்சனையும் நிகழ்த்துவித்து வழிபாடாற்றுகிறார்கள்.

சோழநாட்டைச் சிவாலயமாகக்கொண்டு வழிபடும் முறை யில் மத்தியார்ச்சுனம் என வழங்கும் திருவிடைமருதூர்த் திருக் கோயிலை சிவத்தலமாகவும், சூழவுள்ள திருவலஞ்சுழியை விநா யகர் தலமாகவும், சுவாமிமலையை முருகன்தலமாகவும். திருவா வடுதுறையை நந்தித் தலமாகவும், திருஆலங்குடியைத் தட்சிணா மூர்த்தித்தலமாகவும், சிதம்பரத்தை நடராஜப்பெருமானுக்குரிய தலமாகவும், சீகாழியைப் பைரவர்தலமாகவும், திருஆப்பாடி யைச் சண்டேசுவரர் தலமாகவும், சூரியனார்கோயிலை நவக்கிரகத் தலமாகவும் கொண்டு விளங்கும் தலங்களையும் வழிபட்டருளி னார்கள்.

வழிபாடுசெய்த திருத்தலங்கள்

16—12—82 மார்கழி முதல்நாள் வியாழக்கிழமை மயிலாடு துறை ஸ்ரீ மாயூரநாதசுவாமி திருக்கோயில், குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், வள்ளலார்கோயில் ஸ்ரீமேதாதட்சிணாமூர்த்திதிருக்கோயில். 17-12-82 வெள்ளியன்று திருக்கடவூர்ஸ்ரீஅமிர்தகடேசுவரசுவாமிதிருக்கோயில், 18-11-82 சனிக்கிழமை தருமை ஸ்ரீ தருமபுரீசுவரசுவாமி திருக்கோயில், 19—11—82 ஞாயிறு, குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீஸ்வரசுவாமி திருக்கோயில், 20—12—82 திங்கள், திருவலஞ்சுழி, சுவாமிமலை. திருவையாறு திருக்கோயில்கள் 21—12—82 செவ்வாய், வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயில், 22—12—82 புதன், திரு விளநகர் ஸ்ரீதுறைகாட்டும்வள்ளலார்திருக்கோயில், 23—12—82 வியாழன் திருவிடைமருதூர் பிச்சக்கட்டளை ஸ்ரீமகாலிங்கசுவாமி திருக்கோயில், ஆலங்குடி, ஸ்ரீ காசியாரண்யேசுவரசுவாமி திருக் கோயில், 24—1.—82 வெள்ளிக்கிழமை சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி திருக்கோயில், திருமுல்லைவாயில் ஸ்ரீ முல்லைவனநாத சுவாமி திருக்கோயில், 25—12—82 சனிக்கிழமை திருநள்ளாறு ஸ்ரீ தர்ப்பாரண்யேசுவரசுவாமி திருக்கோயில், காரைக்கால் - தருமபுரம் ஸ்ரீ யாழ்முரிநாதசுவாமி திருக்கோயில், 26—12—82 ஞாயிற்றுக்கிழமை திருஇந்தளூர் ஸ்ரீபரிமளரங்கநாதசுவாமிதிருக் கோயில், கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி திருக்கோயில், மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமிதிருக்கோயில். 27—12—82 திங்கட்கிழமை, வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயில் (கிருத்திகைவிழா), 28—12—83செவ்வாய்க்கிழமை திருமயிலாடுதுறை ஸ்ரீ காசிவிஸ்வநாதசுவாமி திருக்கோயில், 29—12—82 புதன்கிழமை பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி திருக் கோயில், கழனிவாசல் ஸ்ரீ விநாயகர் திருக்கோயில், 30—12—82 வியாழக்கிழமை சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் திருக்கோயில் (ஆருத்ராதரிசனம்), 31—12—82 வெள்ளிக்கிழமை தருமபுரம் ஸ்ரீ வனதுர்க்காதேவி திருக்கோயில், குடந்தை ஸ்ரீ கும்பேசுவரர் திருக்கோயில். ஸ்ரீ பாணபுரீசுவரர் திருக்கோயில் வழிபாடு, 1—1—83 சனிக்கிழமை திருக்குறுக்கை ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி திருக்கோயில், 2—1—83 ஞாயிற்றுக்கிழமை சூரியனார்கோயில் திருக்கோயில், திருமங்கலக்குடி ஸ்ரீப்ராணேசுவரர்திருக்கோயில், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுசுவாமி திருக்கோயில் 3—1—83 திங்கட்கிழமை திருநின்றியூர் ஸ்ரீ லட்சுமிபுரீசுவரசுவாமி திருக் கோயில், திருப்புன்கூர் ஸ்ரீ சிவலோகநாதசுவாமி திருக்கோயில் 4—1—83 செவ்வாய்க்கிழமை வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயில், மருவத்தூர்த் திருக்கோயில், 5—1—83 புதன் கிழமை திருப்பறியலூர் ( பரசலூர் ) ஸ்ரீ வீரட்டேசுவரர் திருக்

கோயில், 6—1—83 வியாழன், திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி திருக்கோளிலி (திருக்குவளை) ஸ்ரீ தியாகராஜசுவாமி திருக்கோயில், 7—1—83 வெள்ளி திருக்கருப்பறியலூர் (தலைஞாயிறு) ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவரசுவாமி திருக்கோயில் 8—1—83 சனி செம்பொன்னார்கோயில் ஸ்ரீ குமரக்கோவில் 9—1—83 ஞாயிறு, திருநல்லூர்ப்பெருமணம் (ஆச்சாள்புரம்) ஸ்ரீசிவலோகத்தியாகர் திருக்கோயில், கடைக்கண்விநாயகநல்லூர், பட்டவிளாகம் விநாயகர்சோயில் வழிபாடு, 10—1—83 திங்கள், மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர் திருக்கோயில் 11—1—83 செவ்வாய், தருமைத் திருக்கோயில்கள், 12—1—83 புதன், திருச்சிராப்பள்ளி ஸ்ரீதாயுமானேசுவர் திருக்கோயில் திருக்கற்குடி (உய்யக்கொண்டான்) ஸ்ரீ உஜ்ஜீவநாதசுவாமி திருக்கோயில், திருநெடுங்களம் ஸ்ரீ நித்தியசுந்தரர் திருக்கோயில், 13—1—83 வியாழன், திருப்பனந்தாள் ஸ்ரீ செஞ்சடையப்பர் திருக்கோயில் திருஆப்பாடி திருச்சேய்ஞலூர் ஸ்ரீ சக்திபுரீசுவரர் திருக்கோயில் தை முதல் நாள் 14—1—83 ஸ்ரீ மயூரநாதர், ஸ்ரீ சித்திவிநாயகர், ஸ்ரீ வரசித்தி விநாயகர் திருக்கோயில், ஸ்ரீகண்கொடுத்தவிநாயகர் திருக்கோயில் ஆகிய தலங்களில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வழிபாடுசெய்தருளினார்கள். திருப்பனந்தாள்வழிபாட்டின்போது ஸ்ரீ காசிமடம் ஸ்ரீமத் காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்று, வழிபாடு ஆற்றினார்கள். அன்பர்கள்தரிசித்து அருட்பிரசாதம்பெற்றுக்கொண்டனர். தல வழிபாட்டின்போது ஆங்காங்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன.

## வைத்தீசுவரன்கோயிலில் தைச்செவ்வாய்த் திருவிழா

தருமையாதீனத்திற்குச்சொந்தமானவைத்தீசுவரன்கோயில் எனவழங்கும் புள்ளிருக்கு வேளூரில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்குத் தைச்செவ்வாய்த் திருவிழா 30—1—83 முதல் 8—2—83 வரை மிகச்சிறப்பாக நடைபெற்றது. திருவிழா நாட்களில் காலை, மாலை விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நடைபெற்றன. 7—2—83 திங்களன்று திருத்தேரில் பவனிவரும் காட்சியும் 8—2—83 செவ்வாய் அன்று சித்தாமிர்த தீர்த்தத்தில் கடைச் செவ்வாய்த் தீர்த்த விழாக் காட்சியும் நிகழ்வுற்றன. திருவிழா நாட்களில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்களும், புலவர்களும், முருகப்பெருமானைப்போற்றித் துதித்த அருளாளர்களைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றினர். தேவஸ்தானத் திருமுறைப் பணியாளர், திருமுறைக் கலாநிதி, திரு. க. சொக்கலிங்க ஓதுவார் நாள்தோறும் திருமுறைப் பாராயணம் நிகழ்த்தினர். அன்பர்பலர் பெருமானை வழிபட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டும் பயனுற்றனர்.

## விருத்தாசலம்

## அருள்மிகு விருத்தகிரீசுவரர் திருக்கோயில்

## திருப்பணித் தொடக்கவிழா

திருமுதுகுன்றம் எனப்பெறும், விருத்தாசலம் சமய உலகில் புகழ்பெற்ற திருத்தலம். இத்தலத்தில் விளங்கும் விருத்தகிரீசுவரர் திருக்கோயில் மிக்கச் சிறப்புடையது. நான்கு இராஜ கோபுரங்களும், மணிமுத்தாநதிக்கரையில் அமைந்து விளங்கும் பழமையும் பெருமையும் உடைய இத்திருக்கோயில் திருப்பணியை அன்பர்கள் பலரும் திருப்பணிசெய்ய முற்பட்டுள்ளனர். திருப்பணிக் குழுவின் சார்பில், திரு. என், வி. ஏ. இரத்தினசபாபதிச் செட்டியார் அவர்களும், திருப்பணிக்குழுச் செயலர் திரு. எஸ். வேதரத்தினம் அவர்களும், மற்றும் பக்தர்களும், தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை வந்து தரிசித்து, திருக்கோயிற் திருப்பணியைத் தொடங்கி வைக்க வேண்டுமெனவேண்டிக்கொண்டார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பெருமகிழ்வோடு இந்நற்பணியைச் செய்விக்க இசைந்தருளினர்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பூர்வாசிரமத்து இளமைப்பருவத்தில், திருமுறைபயின்று, நாடோறும் வழிபட்டு வந்த விருத்தாசலம் திருக்கோயிலுக்கு, ஞானபீடம் ஏறியபின் முதன்முறையாகச் செல்வதால் திருப்பணித் தொடக்க விழாவோடு சிறப்பு வழிபாட்டு நிகழ்ச்சிகளையும் ஆதீனச் சார்பில் செய்விக்கக் கட்டளையிட்டு அருளினர்கள்.

*17—1—83* அன்றுகாலேஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்கள் விருத்தாசலத்திற்கு எழுந்தருளினர்கள். நகரஎல்லையை அடைந்ததும் அன்பர்கள்பலரும் பூரணகும்பமரியாதையுடன் குருமகாசந்நிதானம் அவர்களை வரவேற்றனர். குருமகாசந்நிதானம் அவர்கள் தேவாரப் பாடசாலைக்கு எழுந்தருளி அன்பர்களுக்கு ஆசிநல்கி திருக்கோயில் திருப்பணிந் தொடக்க விழாவிற்கு எழுந்தருளினர்கள். ஆலய வழிபாட்டிற்குப்பின் தொடக்க விழாச் சிறப்புற நடைபெற்றது. விருத்தாசலம் குமாரதேவர் மடம், ஸ்ரீலஸ்ரீ கல்யாணசுந்தர சிவப்பிரகாச பண்டாரசந்நிதி அவர்களும், குருமகாசந்நிதானம் அவர்களோடு வழிபாட்டில் கலந்துகொண்டார்கள். திருப்பணித் தொடக்கவிழா சிறப்புற நடைபெற்றது. திருமுறை ஓதற்குப்பின் திருப்பணிக்குழுத் தலைவர் திரு. டி, எஸ். சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் வரவேற்

புரை கூறினர். இறைபணிமன்றத்தலைவர், திரு. ஆ. மெய்கண்ட நாதன் அவர்கள் பாராட்டுரைப் படித்தளித்தார், குமாரதேவர் மடஶ்ரீலஶ்ரீபண்டாரசந்நிதி அவர்களும், இந்துசமய அறநிலையத் துறை துணை ஆணையர் திரு. கே. சிதம்பரம் பி. ஏ., அவர்களும், சிதம்பரம் திரு, ஜி. வாகீசம் பிள்ளை அவர்களும், மயிலாடுதுறை திரு. ஆறுமுகம் பிள்ளை அவர்களும், டாக்டர் திரு. எம், சுவாமி நாதன் அவர்களும், திரு. சிவ. பழமலை அவர்களும், திரு. இரத்தினச்சபாபதிச் செட்டியார் அவர்களும், தருமையாதீனம் திரு. வி. சா, குருசாமி தேசிகர் எம். ஏ., அவர்களும், திரு. இராம. செல்லப்பச் செட்டியார் அவர்களும், நிர்வாக அதிகாரி திரு. எம். இராமசாமி அவர்களும், திருப்பணிச் சிறப்புக்கள்பற்றி உரைநிகழ்த்தினர்.

ஶ்ரீலஶ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருப்பணியைத் தொடங்கிவைத்து ரூ. 25,000/ ஆதீனச்சார்பில் அளிப்பதாகத் தெரிவித்தருளினர்கள். அன்பர்கள் பலரும் ஶ்ரீலஶ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் திருக்கரங்களில் தனித்தனியேவந்து திருப்பணிநன்கொடைகளை வழங்கினர். தொடக்கவிழா அன்றே ரூ. 22,318/ காணிக்கையாகவந்துசேர்ந்தது. திருப்பணிக்குழுச் செயலர் திரு. எஸ். வேதரத்தினம் அவர்கள் அனைவர்க்கும் நன்றி கூறினர்.

ருத்ராபிஷேகம் :-

தருமையாதீனச் சார்பில், ஶ்ரீ விருத்தகிரீஸ்வரர்க்கும், ஶ்ரீ விருத்தாம்பிகைக்கும் வசோத்தார ஹோமத்துடன் மகன் யாசபூர்வ ஏகாதச ருத்ரபாராயண அபிஷேகம் உச்சிக்காலத் தில் சிறப்பாக நடைபெற்றது. திருக்கோயிலில் உள்ள எல்லா மூர்த்திகளுக்கும், விசேஷ அபிஷேக அர்ச்சனை அலங்கார ஆராதனைகள் நடந்தன. அனைத்து மூர்த்திகளுக்கும், புது வஸ்திரம் சார்த்தி, சிறப்பு வழிபாடு நிகழ்த்தியக்காட்சி, அனை வர்க்கும் பெருவிருந்தாய் அமைந்திருந்தது. இரவு சுவாமி அம்பாள் முதலிய மூர்த்திகளுக்கு பஞ்சமுகார்ச்சனை, நவசக்தி அர்ச்சனைகள் நடைபெற்றன. ஶ்ரீலஶ்ரீ மகாசந்நிதானம் அவர் கள் எல்லா மூர்த்திகளுக்கும் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கியருளினர்கள். ரூபாய் பதினைந்தாயிரம் மதிப்புள்ள உருத்திராக்ஷ மகரகண்டிகையை ஶ்ரீலஶ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஶ்ரீ பழமலைநாதருக்குக் காணிக்கையாகச் சார்த்தியருளினர்கள்.

கொலுக்காட்சி :-

மாலை 5 மணியளவில் விருத்தாசலம் தேவாரப் பாடசாலை யில் ஶ்ரீலஶ்ரீகுருமகாசந்நிதானம் அவர்களைக் கொலுவீற்றிருக்கச்

செய்து திரு. என். வி. ஏ. இரத்தினசபாபதிச்செட்டியார் அவர்கள் பொன்னுடை போர்த்தி வரவேற்புரைப் படித்தளித்து வழி பட்டார். விருத்தாசலம் அன்பர்கள்பலரும் இக்குருவழிபாட்டில் கலந்துகொண்டு, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாசியைப் பெற்றனர். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருக்கோயிற் சிவாச்சாரியர்கள், பணியாளர், பலர்க்கும் புத்தாடைகள் வழங்கியருளினார்கள்.

ஸ்ரீ குமாரதேவர்மடம் விஜயம் :-

மாலை7மணியளவில், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் விருத்தாசலம் ஸ்ரீ குமாரதேவர் மடத்திற்கு எழுந்தருளினார்கள். மடத்தின் திருவாயிலில், ஸ்ரீலஸ்ரீ கல்யாணசுந்தர சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள் மகாசந்நிதானம் அவர்களைப் பொன்னுடை போர்த்தி, மலர்மாலைசூட்டி வரவேற்றார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களும், ஸ்ரீ குமாரதேவர்மடம் பண்டாரசந்நிதி அவர்கட்குப் பொன்னுடை போர்த்திக் கௌரவித்தார்கள்.






ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்
ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(துந்துபி௵ மாசி௴ 1௳ முதல் 30௳ முடிய)
(13—2—1983 முதல் 14—3—1983 முடிய)

| | | | |
|---|---|---|---|
| | | | ரா |
| சுக் செ சூ | இராசி | | |
| பு சந் | | | |
| ல/ கே | கு | சனி | |

| | | | |
|---|---|---|---|
| | ல/ சு | | செ கே |
| பு | அம்ஸம் | | |
| | | | |
| சனி ராகு | கு | சூ | சந் |

ஸ்ரீ துந்துபி௵ தை௴ 1௳ ஸ்திரவாரம் அவிட்ட நக்ஷத்திரம் நாகவ கரணம்கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 50நாழிகை 18 வினாடிக்கு தனுர்லக்கினத்தில் ஸ்ரீ லோக ரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு மகர ராசியிலிருந்து கும்பராசி சங்கிரமணமாக மாசிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். மறுநாள் பானுவாரம் மாசி௴ முதல் தேதியாகிறது. அன்று விஷ்ணுபதி புண்ணிய காலமாகும். சங்கிரமண கால கிரகஸ்திதியின் பலனாவது லோகில் எங்கும் செம்மண் பூமியில் சிவந்தவகை தானியங்களின் விளைவு மிகுந்துவரும். பிரஜைகள் ஊக்கத்துடன் பலதுறை தொழில்களிலும் செயல் புரிந்து முன்னேற்ற ஸ்திதியில் விளங்குவர். ஆன்றோர்கள் சிவநேயசெல்வர்களானவர்கள், சிவபுண்ணிய கைங்கர்யங்கள் செய்தும் நெறியாக தர்மம் காத்தும் புனித சேவை புரிந்து ருவவர். தேசங்களில் ஆளுநர்கள் சர்வேஸ்வரன் கட்டளையில்-

இறைமைகொண்டு தெய்வநீதியாக ஆட்சிபுரிந்து மக்களை இரட்சிப்பர்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் இவ்வுலகம் நீடிக்க ஈஸ்வர கிருபையில் அவதாரமாகி வந்து சிவகளைபொலிவுற்று விளங்குகின்ற ஸ்ரீசிவஞானகுருமகான்கள், குருமகாசந்நிதானங்கள் தம் சிஷ்ய கோடிகளுக்குச் சிவஞானம் போதித்தும் 12 வருஷம் குருவழி அனுபவத் தம்பிரான்களுக்கு ஞானதீக்ஷை செய்தும் ஆசியருள்வார்கள். லோகிற்கு மனுதர்ம நெறிமுறையினைத் திருவாய்மலர்ந்து இயம்பி அருள்வார்கள். அவ்வழிச் சீலர்கள் நப்போல் வளைவில் லோக மாந்தர்கள் உய்வார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் விசேஷபூசைகள் நடைபெறும். பிரஜைகள் சிவதரிசனம் செய்து ஆனந்திப்பர்; செவ்விய வழியில் வாழ்க்கை நடத்துவர்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼
( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் கணிசமாகவரும். குலநலனில் நல்ல காரியங்களைச் செய்யும். எழுத்துமூல விஷயங்களில் நல்லனஏற்படும். அரசாங்கத்தில் நல்ல கௌரவம்தரும். எல்லா காரியங்களையும் புத்தி சாதுரியத்தில் நடத்திக் கொண்டிருக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். பிப்ரவரி 13, 14, 15, 18, 19, 22, 23, 24, மார்ச்சு 1, 2, 3, 4, 10, 11, 12, 13, 14 தேதிகளில் தனதாயம், காரியஜெயம், நல்லஉற்சாகம் ஏற்படும். மார்ச்சு 5, 6, 7, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½
( இ. ஊ. ஏ. – ஒ. வ. வி. வு. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் செந்நெல் பிராப்தி மிகுந்துவரும். சகோதரர் நல்லஸ்திதியில் பக்கபலமாக இருந்து வருவர். வீடு வாகன பிராப்தியில் நல்ல சௌகரியம் இருந்துவரும். ஜீவனோபாயத் தொழில்களில் விசேஷநற்பலன்வரும். உத்தியோகத்தில் உயர்வளிக்கும். அரசாங்கத்திலிருந்து லிகித மூலங்களில் நல்ல சேதிவரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். பிப்ரவரி 16, 17, 20. 21, 25, 26 மார்ச்சு 3, 4, 5, 6, 7, 13, 14

தேதிகளில் தனுதாயம், கௌரவம், அரசாங்க அனுகூலம்ஆகிய நற்பலன் ஏற்படும். மார்ச்சு 8, 9 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾
( கா. கி. - கு. க. ஸ. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வரும். பந்துமித்திரர்கள் பிர்தியாக காட்சியளிப்பர். முயற்சிக்கின்ற எல்லா காரியங்களும் வெற்றியாகநடக்கும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் விசேஷ நற்பலன்வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 16, 17, 18, 19, 22, 23, 26, 27, 28 மார்ச்சு 6, 7, 8, 9 தேதிகளில் தனுதாயம் நல்ல சௌகரியம், காரியஜெயம் ஆகிய நற்பலன்தரும். மார்ச்சு 10, 11, 12 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.
( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் கணிசமாக வந்துகொண்டிருக்கும். வாகனசுகம் திருப்தியளிக்கும். பிப்ரவரி 27உ ஆனுல் அரசாங்கத்திலிருந்து குறிப்பிட்டிருக்கின்ற லிகிதங்கள் வருதல், மனசந்துஷ்டியாக பிரவிருத்திகளில் ஈடுபடுதல் ஆகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 18, 19, 20, 21, 24, 25, 26 மார்ச்சு 1, 2, 8, 9, 10, 11, 12 தேதிகளில் தனவரவு, நற்செய்திவருதல், காரியஜெயம் ஆகிய நற்பலன்கள் ஆகும். பிப்ரவரி 13, 14, 15 மார்ச்சு 13, 14 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

5. சிம்மம் :- மகம் – பூரம் – உத்திரம் ¼
( ம. மி. மு. மே. – மோ. ட. டி. டு. – டே.)

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் வந்து கொண்டிருக்கும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் பிரபலம் ஏற்படும். சினிமா காண்ட்ராக்ட் ஒப்பந்தம் முதலியவற்றில் விசேஷ நன்மைகளை உண்டுபண்ணும். வீடுவாகனங்களில் நல்லன ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 13, 14, 15, 20, 21 22, 23, 24 மார்ச்சு 3, 4, 10, 11, 12 தேதிகளிூ

தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 16, 17 தேதிகளில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½
(டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ.)

கன்னியாராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபிவிருத்தியில் நல்ல தனம் பாக்கியம் வந்துசேரும். சகோதரருக்கு மேலிடத்திய நன்மைகளை ஏற்படுத்தும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் தரும். வித்தியாவியாபாரதி கலைத்துறைகளில் ஜீவனோபாயங்களில் பிப்ரவரி 27 தேதிக்கு மேல் விசேஷ நற்பலனையளிக்கும். இருணம் தீரும். ஆரோக்கியம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். பிப்ரவரி 13, 14, 15, 16, 17, 22, 23, 24, 25, 26 மார்ச்சு 1, 2, 5, 6, 7, 13, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களை யளிக்கும். பிப்ரவரி 18, 19 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

7. துலாம் :- சித்திரை ½ - சுவாதி - விசாகம் ¾
(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானம் நல்ல விதத்தில் வந்துகொண்டிருக்கும். குடும்பத்தினர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பந்துமித்திரர்கள் வருகைதருவர். வித்தியாவியாபாராதி கலைத்துறைகளில் பிரபலஸ்திதியாகும். எல்லா அலுவல்களும் பரபரப்புடன் நடந்துவரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 16, 17, 18. 19, 25, 26, 27, 28 மார்ச்சு 3. 4, 8, 9 தேதிகளில் தனுதாயம், காரியஜெயம், மனக்களிபுறுதல் ஆகிய நற்பலனளிக்கும். பிப்ரவரி 20, 21 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன்தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.
(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் வந்துகொண்டிருக்கும். உடன் அவசியமானவற்றில் செலவுகளும் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். பிப்ரவரி 27 தேதியனுல் எழுத்துமூல விஷயங்களில் விசேஷ நற்பலனையளிக்கும். வீடு வர்கனபிராப்தியில் நல்ல சௌகரியம் இருந்துவரும். புத்திரர்கள் கல்வி கலை உத்தியோ

கங்களில் சிறந்து விளங்குவர். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். பிப்ரவரி 13, 18, 19, 20, 21, 26, 27, 28 மார்ச்சு 1, 2, 5, 6, 7, 10, 11, 12 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 22, 23 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
( யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பர்தங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் தனவரவுகள் கணிசமாக வந்துகொண்டிருக்கும். வாக்குசாதுரியம் தரும். மேடைப்பிரசாங்கத்தில் கீர்த்தியை யளிக்கும். பொன் மணி பூஷணம் தரும். வீடு வாகனபிராப் தியில் முதலீடு ஆகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 14, 15, 20, 21, 22, 23, 24 மார்ச்சு 1, 2, 3, 4, 8, 9, 13, 14 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும் பிப்ரவரி 25, 26 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும் பாபிவிருத்தியில் நல்ல பண வருமானம் வரும். கொடுக்கல் வாங்கலில் முன்பு வரவேண்டியவற்றில் நல்லன வந்துசேரும். வீடுவாகன பிராப்தியில் பிப்ரவரி 27 தேதிக்கு ஓர்ஒப்பந்தம் செய்யும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 16, 17, 22, 23, 24, 25, 26 மார்ச்சு 3, 4, 5, 6, 7, 10, 11, 12 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 27, 28 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸூ. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும் பாபிவிருத்தியில் நல்லபண வருமானம் வரும். சகோதரருக்கு ஸ்திரிமூல நன்மைகள் ஏற்படும். இராசிக்கு சிரோபாதை நலிவு ஏற்படும். உடன் குணமாகும். வித்தியா வியாபாராதிகளில் கலைத்துறையில் நல்லபிரயோஜனம் வந்துசேரும். வீடு சீர்திருத் தம் ஆகும். வனம் தோப்புகளில் விசேஷ நற்பயன் வரும்.

தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 13, 14, 15, 18, 19, 25, 26, 27, 28 மார்ச்சு 5, 6, 7, 8, 9, 13, 14 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**12.** மீனம்:– பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.
( தி. – து. ஸ. ச. த. – தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பாபீவிருத்தியில் பண வரவு செலவு சரிசமனுக இருந்துவரும் வித்தியா வியாபாரதிகளில் விளம்பரமும் முதலீடுசெய்தலும் ஆகும். பூர்வசொத்து பிராப்தியில் நல்லன ஏற்பட்டுவரும். எல்லாவிஷயங்களிலும் காலதாமதம் ஆயினும் முடிவில்நன்மை உண்டாகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பிப்ரவரி 16, 17, 20, 21, 27, 28 மார்ச்சு 1, 2, 8, 9, 10, 11. 12 தேதிகளில் தாயாதி நற்பலன்களையளிக்கும். மார்ச்சு 3. 4 தேதிகள் சந்திரஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

---

# மகாசிவராத்திரி

**துந்துபி ஞூ மாசி மீ 28 உ (12—3—83) சனிக்கிழமை**

சைவசமயிகள் விரதமிருந்து மிக்க சிறப்போடு சிவ பெருமானை வழிபடும் சிவராத்திரிவிழா, இந்தஆண்டு எந்த நாளில் கொண்டாடவேண்டும் என்ற ஐயத்தைப் பலருக்கும் உண்டாக்கியிருக்கிறது.

சிவராத்திரி தைமாதம் 19 ஆம்நாள் கொண்டாடவேண்டும் எனச் சில பஞ்சாங்கங்களில் குறிக்கப்பெற்றுள்ளதே இவ் வையத்திற்குக் காரணமாகும்.

இந்த ஆண்டு மாசிமாதம் 28 ஆம் நாள் (12—3—83) சனிக் கிழமையே மகாசிவராத்திரி நாளாகும். சிவராத்திரி விரதம் அனுட்டிப்பதற்கும் இரவு நான்குகாலங்களில் சிவபெருமானைப் பூசிப்பதற்கும் சிவதீக்ஷை செய்துகொள்ளுதற்கும் அந்நாளே உரியது.

மாதங்களைச் சௌரமாதம் என்றும், சாந்திரமாதம் என்றும் இருவகையாகக் கணக்கிடுவர். சூரியன் மேஷம் முதலிய இராசிகளில் சஞ்சரிக்கும்காலங்களைக் கணக்கிட்டு மாதங்களைக் கணிப்பது சௌரமாதம், சித்திரை வைகாசி என நாம் இன்று வழக்கில் கொண்டுள்ளவை சௌரமாதங்களாம். பூர்வபக்ஷம் பிரதமை முதல் அமாவாசை முடிய உள்ள முப்பது நாட்களை ஒருமாதம் எனக்கொள்வது சாந்திரமாதம்.

சிவாகமங்கள், சிவப்பிரதிஷ்டை, மகாகும்பாபிஷேகம், சிவ தீட்சைகள், சிவவிழாக்கள்முதலியவற்றைச் சௌரமாதங்களைப் பின் பற்றியே செய்யவேண்டுமெனவும் சாந்திர மாதத்தில் செய்யக்கூடாதெனவும் கூறுகின்றன.

"ஸ்தாபனம் ப்ரோக்ஷணம் தீக்ஷா சிவராத்ரி; சிவோத்ஸவ:
சௌர மாசேது கர்த்தவ்ய: சாந்த்ரமானேந காரயேத்"

என்பது சிவாகமவாக்கியம். பீமசம்கிதையிலும், துலாஸ்நானம், கார்த்திகைதீபம், தனுர்மாதபூசை, சிவராத்திரி ஆகியவற்றைச் சௌரமாதத்திலேயே செய்யவேண்டுமெனவும், சாந்திரமாதத்தில் செய்யக்கூடாது எனவும் விதிக்கப்படுகிறது. இவ்வகையில் சௌரமாதமான மாசிமாதத்தில் 28 ஆம் நாள் சனிக்கிழமையன்றுவரும் சிவராத்திரியே உத்தமமான மகாசிவராத்திரியாகும். அன்று சனிமகா பிரதோஷம் கூடியிருப்பது மேலும் சிறப்புக்குரியதாகும்.

சிவராத்திரி திரயோதசியும் சதுர்த்தசியும் சேர்ந்தநாள். திரயோதசி சக்தி அம்சமும், சதுர்த்தசி சிவாம்சமும் பொருந்துவன. இவ்விருதிதிகளும் இணைந்து திருவோணத்தோடு கூடி வரும் (12—3—1983) மகாசிவராத்திரித் திருநாளில் அன்பர்கள் விரதம் இருந்தும், சிவாலய தரிசனம் செய்தும், சிவபூசைகள் செய்தும், சிவதீக்ஷைகள் பெற்றும் சிவபுண்ணியப்பேற்றுக்கு உரியவர்களாவார்களாக.



## மகாசிவராத்திரி விரதச் சிறப்பு

மறைகளிற் சாமம், மகங்களில் புரவி
மகம், மலை களில்மக மேரு,
திறைபுனல் நதியிற் கங்கை, ஓர் ஐய்ந்தாய்
நிகழ்ந்தபூ தத்தில்ஆ காயம்,
முறைதெரி சுரரிற் கருமுகில் ஊர்தி,
முதன்பெற் றுயர்ந்ததே போல
அறைதரு விரதம் அனைத்தினும் உரைக்கும்
அரனிரவு அதிகமென் றறிமின்.

## திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுகிய ஸ்ரீ தாயுமானஈசர் திருக்கோயில் குடநீராட்டுவிழா

### தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளிச் சிறப்பித்தார்கள்.

தைத்திங்கள் 13 – ஆம்நாள் புதன்கிழமை காலை 9 – மணியளவில் ஸ்ரீ குருமகாசன்னிதானம் அவர்கள் மலைக்கோயில் எல்லைக்கு எழுந்தருளினுர்கள். இறையன்பர்கள் சூழ அவர்களுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. திருக்கோயில் அறங்காவலர்களும், அலுவலக ஊழியர்களும், பொதுமக்களும் வரவேற்க, ஸ்ரீ குருமணியவர்கள் ஸ்ரீ மௌனமடம் முன்புஉள்ள ஸ்ரீ முத்துக்குமார சுவாமியை வழிபட்டுத் திருமடத்தையடைந்தார்கள். அங்குக்கொலுக்காட்சி வழங்கி, அன்பர்களை மகிழ்வித்தார்கள்.

திருமடத்திற்குத் தமிழ்நாட்டரசு இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் வருகை தந்தார்கள். அவர்களுடன் இந்துசமய அறநிலையத்துறை ஆணையர் உயர்திரு. சண்முகசிகாமணி I. A. S. அவர்களும், திருவரங்கம் சட்டமன்ற உறுப்பினர் உயர்திரு. R. சௌந்தரராசன் அவர்களும், திருக்கோயில் திருப்பணிக்குழு அன்பர்களும் வந்திருந்து, ஸ்ரீ குருமகாசன்னிதானம் அவர்களை வழிபட்டு மகிழ்ந்தார்கள்

காஞ்சி காமகோடி பீடம் புதுப்பெரியவர் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் திருமடத்திற்குத் தன் அன்பர்கள் சூழ எழுந்தருளினுர்கள். அவர்களைத் திருமடத்து கட்டளைவிசாரணை மௌன மகாலிங்கத்தம்பிரான் அவர்கள் மாலையணிவித்து வரவேற்று அழைத்துச் சென்றுர்கள்.

திருமடத்து அரங்கில் தருமையாதீன 26 – ஆவது குருமகா சன்னிதானம் அவர்களும், காஞ்சி காமகோடி புதுப்பெரியவர் சுவாமிகளும், அறநிலையத்துறை அமைச்சரும், ஆணையரும், திருமடத்துக்கட்டளைத் தம்பிரான் சுவாமிகளும் ஓரிடத்திருந்த காட்சிக் காண்பார் கண்ணிறைந்த காட்சியாக இருந்தது.

பின்னர் ஸ்ரீ குருமகாசன்னிதானம் அவர்களும், புதுப்பெரியவர் சுவாமிகளும், அமைச்சரும், ஆணையரும், அலுவலர்களும் இறையன்பர்களும், திருமுறைப் பாராயணத்துடன் இன்னியங்கள் முழங்க, தாயுமானஈசர் திருக்கோயில் யாகசாலை மண்டபத்தை அடைந்தார்கள். அனைவரும் ஒருங்கிணைந்து யாகசாலைக்கு வழிபாடு இயற்றி மகிழ்ந்தனர்.

அங்கிருந்து உச்சிவிநாயகர் கடத்துடன் காஞ்சி புதுப்பெரியவர் சுவாமிகள் உச்சிமலைக்கு எழுந்தருளினார்கள். நம் தருமையாதீன ஸ்ரீ குருமணியவர்கள் ஸ்ரீ தாயுமானவர், ஸ்ரீ மட்டுவார் குழலம்மை, மற்றும் பரிவார தெய்வங்களின் கடத்துடன் நாதசுரக் குழுவினர் மல்லாரி வாசிக்க, காண்பார் கண்நிறைய, உள்ளமெல்லாம் தெய்வப்பரவசம் அடைய, மக்கள் வெள்ளம் குழுமியிருந்த திருக்கோயில் மேல்தளத்தில் உள்ள கோபுரத்தை அடைந்தார்கள்.

காலை 9-50 மணியளவில் கோபுர உச்சியில் அமைக்கப் பட்டிருந்த மேடைக்குக் கடத்துடன் எழுந்தருளினார்கள். அவர்களுடன் அறநிலையத்துறை அமைச்சரும், ஆணையரும், கட்டளைத் தம்பிரான்களும் சென்றனர். ஸ்ரீ குருமணியவர்கள் தலைமையில், சிவாச்சாரியார் பச்சைக் கொடிகாட்டி, இன்னியம் முழங்க, திருமுறை வேத, மந்திரஒலி எங்கும் ஒலிக்க, இறையன்பர் கூட்டம் ஆனந்த பரவசம் அடைய குடநீராட்டு நிகழ்ச்சி நடைபெற்றது. தீபாராதனையும் நடைபெற்றது.

அதேவேளையில் ஸ்ரீ மட்டுவார் குழலம்மை கோபுரத்திற்கும் உச்சிவிநாயகர் கோபுரத்திற்கும் குடநீராட்டு நிகழ்ச்சி நடந்தேறியது.

பின்னர் ஸ்ரீ தாயுமானவர் சன்னதிக்கு ஸ்ரீ குருமணியவர்கள் அன்பர் புடைசூழ எழுந்தருளி மகாபிஷேகம் கண்டு, வழிபாடு செய்து, அன்பர்கட்கு வீபூதிப்பிரசாதம் வழங்கி மகிழ்ந்தார்கள். அமைச்சர், ஆணையர், அறங்காவலர்கள், திருப்பணிக்குழுவினர் அனைவருக்கும் கோயில் மரியாதை, ஸ்ரீ குருமணியவர்கள் திருமுன்னிலையில் நடைபெற்றது.

ஸ்ரீ குருமணியவர்களும், மற்றவர்களும் ஸ்ரீ மட்டுவார் குழலம்மைத் திருக்கோயிலை அடைந்து வழிபாடியற்றி மகிழ்ந்தார்கள். பின்னர், ஸ்ரீசகஸ்ரலிங்கம் திருக்கோயிலில் சிறப்புவழிபாடு நடைபெற, அதிலும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

ஸ்ரீ மௌன மடத்து முகப்பில் உள்ள ஸ்ரீ முத்துக்குமார சுவாமிக்கு காலை 11-மணியளவில் வழிபாடு செய்வித்து, அமைச்சர், ஆணையர், அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கி மகிழ்வித்தார்கள்.

மீண்டும் திருமடத்தில், அறநிலையத்துறை அமைச்சருடனும் ஆணையருடனும் ஆலோசனை கலந்து மகிழ்ந்துரையாடியிருந்தார்கள். அப்பொழுது, மீண்டும் காஞ்சிப் புதுப்பெரியவர் சுவாமிகள், திருமடத்திற்கு எழுந்தருள, அவர்கள் வரவேற்கப் பட்டு, ஸ்ரீ குருமணியவர்களுடன், அவர்களும் கலந்துகொள்ள,

உரையாடல் பலர் முன்னிலையிலும், பின்னர் தனியாகவும் நடைபெற்றது. அது சமயப்பணி குறித்த ஆலோசனையாக அமைந்தது.

ஸ்ரீ குருமணியவர்கள் அமைச்சருக்கும், ஆணையருக்கும். திருப்பணிக் குழுவினருக்கும், நிர்வாக அலுவலருக்கும் பட்டாடை அணிவித்துப் பிரசாதம் வழங்கி ஆசீர்வதித்தார்கள். அமைச்சரும் ஆணையரும் விடைபெற்றுச் செல்ல, மீண்டும். ஸ்ரீ காஞ்சி காமகோடிப் புதுப்பெரியவர் சுவாமிகளுடன் தனிமையில் ஆலோசனை கலந்தார்கள்.

அப்பொழுது அங்கு வந்திருந்த இசைமணி சீர்காழி S. கோவிந்தராசன் அவர்கள் ஸ்ரீ குருமணியவர்கள் மீதும் ஸ்ரீ காஞ்சி காமகோடிப் புதுப்பெரியவர் மீதும் பக்தி பூர்வமாய்ப் பாடிய பாடல்கள், கேட்பார்தம் நெஞ்சை நெகிழ்வித்தன. ஸ்ரீ குருமணியவர்கள் இசை மணியை அழைத்துப் பட்டாடை அணிவித்துப் பிரசாதம் வழங்கி ஆசீர்வதித்தார்கள். ஸ்ரீகாஞ்சிப் புதுப்பெரியவர் சுவாமிகள், திருமடத்தை விட்டுப் புறப்பட, அவர்கள் வழியனுப்பி வைக்கப்பட்டார்கள்.

நண்பகல் திருமடத்தில் சிவனடியார்கட்கும் பொதுமக்கட்கும் மகேஸ்வரபூசை சிறப்பாகச் செய்விக்கப்பட்டது.

மாலையில் ஸ்ரீ குருமகாசன்னிதானம் அவர்களைத் திருச்சிநகர் அன்பர்களும், வெளியூர் அன்பர்களும் உயர்பதவி அலுவலர்கள் வணங்கி உரையாடி மகிழ்ந்தார்கள்.

இரவு மீண்டும் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி, ஸ்ரீ சகஸ்ரலிங்கம் உச்சிவிநாயகர், ஸ்ரீ தாயுமானவர், ஸ்ரீ மட்டுவார் குழலம்மை, ஸ்ரீ சொக்கநாதர், அறுபத்துமூவர் திருக்கோயிலை அடைந்து, இரவு வழிபாட்டைத் திருமுறைப் பாராயணத்துடன் செய்வித்தார்கள். ஊழியர்கட்கு அவர்கள் மகிழ, மரியாதை செய்வித்தார்கள்.

இரவு – 9 மணியளவில் பஞ்சமூர்த்திகளுக்கும் அலங்காரம் செய்வித்து, வெள்ளி ரிஷப வாகன திருவீதியுலா நிகழ்ச்சியைத் தொடங்கிவைத்துச் சிறப்பித்தார்கள். வீதியுலா, திரு. சுபாணிக் குழுவினர் சிறப்பு நாதசுர இசையுடன் நடைபெற்றது.

திருமுறை இசைவாணர்கள், தமிழ்நாடு முழுவதுமிருந்து வந்து திருமுறை இசைபாடி மகிழ்வித்தார்கள்.

இரவு 12–மணிக்குமேல் ஸ்ரீ குருமகாசன்னிதானம் அவர்கள் மீண்டும் தருமைக்கு எழுந்தருளினர்கள்.

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுகிய ஸ்ரீதாயுமானஈசர் திருக்கோயிலிலும், ஸ்ரீமௌனமடத்திலும்

## செய்வித்துள்ள திருப்பணிகள்

ஸ்ரீ மட்டுவார் குழலம்மை உடனுகிய ஸ்ரீ தாயுமானவர் திருக்கோயிலுக்குக் கடந்த 1966 ஆண்டு, 25 வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ கயிலைக்குருமணியவர்கள் தலைமையில், அப் பொழுதிருந்த திருப்பணிக் குழுவினரால் குடநீராட்டு விழா சிறப்பாகச் செய்விக்கப்பட்டது.

17 ஆண்டுகட்குப் பிறகு, கடந்த தைமாதம் 13 ஆம்நாள் புதன்கிழமை காலை 9-50 மணியளவில் தருமையாதீனம் 26 வது குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமையில் குடநீராட்டு விழா இறையன்பர்கள் மகிழ செய்விக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ தாயுமானவர் திருக்கோயிலில் உள்ள சித்திரமண்டபம், அறுபத்துமூவர் மண்டபம், ஸ்ரீ சோமாஸ்கந்தர் மண்டபம், ஸ்ரீ சகஸ்ரலிங்கம் திருக்கோயில், மடப்பள்ளி ஆகிய இடங்கள், ஸ்ரீ மௌனமடம் பொறுப்பில் உள்ள இடங்கள் ஆகும். இவை களைப்பராமரிக்கும் முழுவுரிமை, தருமையாதீனத்திற்குச்சொந்த மான ஸ்ரீ மௌனமடத்திற்கே உரியதாகும். மேலும், இரண்டு கால நித்திய வழிபாடு, மௌனமடம் கட்டளைப் பொறுப்பில் நடந்துவருகிறது.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசன்னிதானம் உத்தரவின்பேரில் ஸ்ரீ தாயு மானவர் திருக்கோவில் சித்திரமண்டபம் முழுவதும், முழுமை யான திருப்பணி செய்யப் பெற்றுள்ளது. மண்டபம் மேல்வி தானம் முழுவதும், நாற்புறச்சுவர்களும் வண்ண ஓவியங்களால் அழகு செய்யப்பட்டுள்ளன.

மிகப்பெரிய பிரளயகாலேசுவரர் சித்திரம், காலசம்கார மூர்த்திச் சித்திரம், உருத்திரதாண்டவம், காளிநடனம், மற்றும் திருக்கோயில் வரலாறு, ஸ்ரீ மௌனகுரு தாயுமானவருக்கு உபதேசம், கயிலைக்குருமணியின் திருவுருவம், சிவபிரானின் இருபத்தைந்து மூர்த்தங்கள், மேல் விதான வட்ட, சதுர ஓவியங்கள் யாவும், நவீன எண்ணெய் வண்ணங்களால், மிகவும் சிறப்பாகப் புதுப்பிக்கப்பட்டுள்ளன. காண்பார் தம் கண்கள் திகைக்கும் அளவிற்கு அவை அழகு செய்யப் பட்டுள்ளன.

1. சித்திர மண்டபத் தென்புறச் சுவரில் மலைக்கோட்டையைப் பின்னணியாகக் கொண்டு, ஸ்ரீ மௌனகுரு ஸ்ரீ தாயுமானவருக்கு உபதேசம் செய்யும் புதிய ஓவியம் ஆயில் வண்ணத்தால் தீட்டப்பெற்றுள்ளது. அதற்கு அருகில், தருமையாதீன ஆதிகுருமுதல்வராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருவுருவமும் அவரை, 25 – ஆவது குருமகாசன்னிதானமும், தற்பொழுது குருபீடத்திலிருக்கும் 26 – ஆவது குருமகாசன்னிதானமும் இருபுறத்தும் வணங்கி நிற்பது போன்ற வண்ண ஓவியம் மிகவும் சிறப்பான முறையில் வரையப்பட்டுள்ளது. இந்தத் திருப்பணிக்குச்சுமார் ரூபாய் 40 – ஆயிரம்வரை ஸ்ரீ குருமணியவர்கள் உத்தரவுப்படி ஸ்ரீ மௌனமடம் கட்டளைசார்பில் செலவிடப் பெற்றுள்ளது.

2. ஸ்ரீ தாயுமானவர் சன்னதி எதிரில் மேல்புறத்தில் உள்ள ஸ்ரீ சோமாஸ்கந்தர் மண்டபத்தைப் பக்கச்சுவர் எடுத்தும், பாதுகாப்பிற்காக இரும்புக்கம்பிக்கதவு சுருங்கி விரியும் வகையில் பெரும்பொருள் செலவில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது, சுவாமியுள்ள மரத்தினலான மஞ்சம் வண்ணம் தீட்டப்பெற்றுத் தெய்வீகமாக்கப்பட்டுள்ளது. மலைப்பாதையில், நூற்றுக்கால் மண்டபத்திற்கு அருகிலுள்ள ஸ்ரீ சகஸ்ரலிங்கம் திருக்கோயில் முழுவதும் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. மேல் உள்ள மர சன்னல்கள் புதுப்பிக்கப்பட்டும், நாற்புறச் சுவர்களும், மேல் கருங்கல் கூரையும் சுத்தம் செய்யப்பட்டும் பலவண்ணங்கள் பூசப்பெற்றும் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. சிவலிங்கத் திருமேனிகட்குப் பாதுகாப்பிற்காகப் புதிய கதவுகள் போடப்பட்டுள்ளன.

3. கொடிமரம் பலிபீடம் அருகில் உள்ளது, அறுபத்துமூவர் மண்டபம். இந்த மண்டபம் முழுவதும் இடிபாடுகளை நீக்கியும், சிமெண்டு இணைப்புக்கொடுத்தும், வெள்ளையடித்தும், 72 அடியார் திருமேனிகளைத் தூய்மை செய்தும், மருந்து சார்த்தியும் எடுப்பாக அடியார் பெயர், மாதம், நட்சத்திரம் எழுதியும், பாதுகாப்புக்கதவு அமைத்தும் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

4. மார்கழிமாத தலயாத்திரை வழிபாட்டிற்குத் திருச்சிக்கு எழுந்தருளிய ஸ்ரீ குருமணியவர்கள் மலைக்கோயிலில் உள்ள ஸ்ரீ தாயுமானவர், ஸ்ரீ மட்டுவார் குழலம்மை, ஸ்ரீ முருகப்பெருமான், ஸ்ரீ தட்சிணமூர்த்தி, அறுபத்துமூவர் உட்பட ஏறத்தாழ 200 – திருமேனிகட்கு அஷ்டபந்தன மருந்து, தானே நேரில் இருந்து சார்த்தி, அன்பர்களை ஊக்கம் கொள்ளச் செய்து அருளினர்கள். மருந்து சார்த்தும்போது அவர்கள் காட்டிய ஆர்வம், இறையன்பர்களை நெகிழ்விப்பதாக இருந்தது. இந்த

அஷ்டபந்தன மருந்து திருப்பணி ஏறத்தாழ 25 ஆயிர ரூபாய் மதிப்புடையதாகும். இவைகளையெல்லாம் சேர்த்துக் கணக்கிட்டால், ஏறத்தாழ ரூபாய் ஒன்றரை இலட்சம்வரைத் திருப்பணிக்காகச் செலவிடப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

## ஸ்ரீ மௌன மடத்தில் செய்துள்ள திருப்பணிகள் :

1. ஸ்ரீ தாயுமானவர் திருக்கோயில் செல்லும் வழியில் கீழ்ப்புறத்தில் உள்ள ஸ்ரீ மௌனமடத்து வாயிலில் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி திருக்கோயில், இதுநாள்வரை மேல்கோபுரம் இல்லாமல் இருந்தது. தற்பொழுது ஸ்ரீ குருமணியவர்கள் உத்தரவுப்படி, சுமார் எட்டுஅடி உயர கோபுரம் மிகவும் குறுகிய காலத்தில், மிக அழகாகக் கட்டப்பட்டுள்ளது. சுவாமிக்கு முன்புறம் மேல்தளம் கட்டியும், விநாயகருக்கும் சிவலிங்கத் திருமேனிக்கும் பாதுகாப்புச்சுவர் எடுத்து, ஓவியம்தீட்டியும்அழகுசெய்யப்பட்டுத் தெய்வீகமாக்கப்பட்டுள்ளது.

2. ஸ்ரீ மௌன மடத்துள் மிகவும் பழைய கட்டடமாக இருந்து, அட்டை மரங்கள் இற்றுப்போய் விழுந்து விடும் நிலையில் இருந்த, நடுவில் முற்றமுடைய மண்டபத்தை இடித்து விட்டு, அகலப்படுத்தி மிகவுயரப் பக்கச்சுவர் எடுத்து, நல்ல வெளிச்சமும் காற்றும் கிடைக்கும் வகையில் பெரியசன்னல்கள் வைத்து, மையமண்டம் ஒன்றுமேல்கூரை இரும்புச்சட்டமிட்டு, சிமெண்டு ஓடு வேயப்பட்டுக் கட்டப்பெற்றுள்ளது. இந்த மண்டபம் எதிர்காலத்தில் சைவசமயக் கூட்டங்கள் நடத்தவும் நூலகம் அமைத்துப் பராமரிக்கவும் பயன்படும். இந்தத் திருப்பணிக்குப் பெரும் பொருள் செலவிடப்பட்டுள்ளது.

3. மடத்து, முன்மண்டபத்தளம் உயர்த்திச் சிமெண்டு பூசப்பட்டும். கட்டளை சுவாமிகள் அறை புதுப்பிக்கப்பட்டும் சீர் செய்யப்பட்டுள்ளது.

இவைகளையெல்லாம் ஸ்ரீ குருமணியவர்கள் நேரில் பார்வையிட்டு இவை இன்னவாறு செய்யவேண்டும் என்று உத்தரவிட்டு, அதன்படிச் செப்பனிடவைத்துள்ளார்கள்.

நடந்துமுடிந்துள்ள திருப்பணி வேலைகளைக் காண்பவர்கள் ஒருஉண்மையை உணரலாம். ஸ்ரீ குருமணியவர்கள், திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மௌனமடம் கட்டளைத் திருமடத்தை தன் இரண்டு கண்களில் ஒன்ருகக் கருதுகிருர்கள் என்பதே அந்த உண்மையாகும்.

30—1—83 **மு. வைத்தியநாதன்,** திருச்சிராப்பள்ளி.

(தமிழாசிரியர்)

# மாசிமாதச் சிறப்பு நாட்கள்

13—2—83 ஞாயிறு, விஷ்ணுபதி புண்ணியகாலம், திருவையாறு மாதப்பிறப்புத்தீர்த்தம்.

18—2—83 வெள்ளி, மாசிமக உற்சவாரம்பம்.

20—2—83 ஞாயிறு, வேளூர்க் கிருத்திகை அபிடேகம், தருமபுரம் ஸ்ரீசண்முகர் கிருத்திகை அபிடேகம், கிருத்திகைவிரதம்.

25—2—83 வெள்ளி, பிரதோஷம்.

26—2—83 சனி, ஸ்ரீ நடராஜர் அபிடேகம், திருக்கடவூர் ஸ்ரீ கால சம்காரமூர்த்தி அபிடேகம், ஆயில்யவிழா, பௌர்ணமி பூஜை.

27—2—83 ஞாயிறு, பௌர்ணமி விரதம், மாதபூஜையில் கிருத கம்பளம் சாற்றுதல், திருவையாறு, திருக்குவளை, கும்ப கோணம், கஞ்சனூர், காஞ்சிபுரம் முதலிய தலங்களில் மகதீர்த்தம், திருக்குவளை நெல்மகோற்சவம்.

1—3—83 செவ்வாய், எறிபத்த நாயனூர் குருபூஜை.

2—3—83 புதன், வேளூர் ஸ்ரீசந்திரசேகரர் உற்சவாரம்பம், சங்கடகர சதுர்த்தி. தருமை பதினேழாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் குருபூஜை.

3—3—83 வியாழன், வேளூரில் இன்று முதல் மூன்று தினங்கள் சூரியபூஜை.

6—3—83 ஞாயிறு, காளாஷ்டமி.

8—3—83 செவ்வாய், திருக்கடவூர் ஸ்ரீ முனீசுவரபூஜை

9—3—83 புதன், காரி நாயனூர் குருபூஜை.

12—3—83 சனி, சனிமகாபிரதோஷம், மகாசிவராத்திரி, மயிலாடு துறை ஸ்ரீ காசிவிசுவநாதருக்கு மகாபிஷேகம், சீகாழி ஸ்ரீஉமாமகேசுவரருக்கு மூன்றும்காலத்தில் புழுக்காப்பு

13—3—83 ஞாயிறு, கோச்செங்கட்சோழ நாயனூர் குருபூஜை.

14—3—83 திங்கள், சர்வஅமாவாசை, அமாவாசை சோமப்பிரதக்ஷிணம், துவாபரயுகாதி, மீனரவி 38 – 42, ஷடசீதி புண்ணியகாலம், திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம், காரடையான் நோன்பு.

---

## மகாசிவராத்திரி விரதப் பயன்

அரியும் யானும்முன் தேடும்அவ் அனற்கிரி அனல
கிரிஎ னும்படி நின்றதால்! அவ்வொளி கிளர்ந்த
இரவ தேசிவ ராத்திரி யாயினது இறைவற்
பரவி உய்ந்தனர் அன்னதோர் வைகலிற் பலரும்.

— கந்தபுராணம் – அடிமுடி தேடு படலம்,

---

Printed & Published by V. Ramaiah Pillai, Managar, Dharmapuram at the Gnanasambandam Press Dharmapuram, Mayiladuthurai 10-2-83